உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 23 | தாது ௵ புரட்டாசி ௴ ௧௳<br>1936 ௵ செப்டம்பர் ௴ 16௳ | பகுதி 3 |

## கடவுள் வணக்கம்.

ஆதியந்த மெனும் எழுவாய் ஈறுஅற்று ஓங்கி
அருமறைஇன் னமுங்காணாது அரற்ற நாளு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேயராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா நீழல்
தண்ணருட்சந் திரமௌலி தடக்கைக்கு ஏற்ற
வேதகனின் மாத்திரமாய் எம்ம னோர்க்கும்
வெளியாக வந்தவொன்றே விமல வாழ்வே. (1)

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
ஒளியாகி வெளியாகி யுருவ மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுடன் உற்பத்தி நண்ணா தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
எந்தையே எம்மானே என்றுஎன்று ஏங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந்து அருள்கூருங் கருணை விண்ணே. (2)

வாயுண்டு வாழ்த்த மௌனஞ் செய்போது மௌன அருள்
தாயுண்டு சேயென்ன என்னைப் புரக்கச் சதானந்த மாம்
நீயுண்டு நின்னைச் சரண்புக நானுண்டு என்னெஞ்சம் ஐயா!
தீயுண் டிருந்த மெழுகு அலவோ கதிசேர்வ தற்கே. (3)

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தே என்உள்ளத் தெளிவே பராபரமே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தி கோலங் கொண்டு எழுந்தருளியிருக்கும் தன்மையை விளக்குகின்றார்.

(இ-ள்.) ஆதியும் அந்தமும் ஆகிய உற்பத்தி அழிவு இல்லாது உயர்ந்து, அருமையாகிய வேதங்கள் இன்னும் தேடியுங் காணாது ஓலமிட, பலவித சமயங்களும் ஒன்றோடொன்று போரிட, உறுதியில் மலையை யொத்த தர்க்கவாதிகள் வெறும் வாய் வாதஞ் செய்து பேயரா யொழிய, வீடு பேறு அடைவதற்குரிய எளிய வழி, மௌன நிலையில்தான் இருக்கிற தென்று எனக்கு அறிவுறுத்தும் பொருட்டு, கல்லால மரத்தின் நிழலில் எழுந்த ருளியிருக்கும் குளிர்ந்த திருவருளையுடைய சந்திர சடாதரனே! விசாலமான கைகளுக்குப் பொருத்தமாக வேறுபா டமைந்த சின்முத்திரா மாத்திரமாய் என்னை யொத்தவர்களுக்கும் பகிரங்கமாகத் தெரியும்படி வெளிப்பட்ட ஒப் பற்ற பெருமானே! நிர்மலமான பெருவாழ்வே! (எ-று.)

"சும்மா இரு, சொல் அற" என்ற உண்மை யுபதேசத்தைக் கடவுள் தக்ஷிணாமூர்த்தி திருக்கோலத்தில் விளக்கியருள்கின்ற தன்மையை, "சாதக மோனத்திலென்ன........... வெளியாக வந்த வொன்றே; விமலவாழ்வே" என்ற அடிகளால் எடுத்துக் கூறி எம் போன்றோர்க்கும் முத்திக்குரிய எளிய வழியைக் காட்டி யிருப்பது குறிப்பிடத்தக்கது.

2. இதனால் இறைவன் பல விதமா யிருப்பதை வெளிப்படுத்துகிறார்.

(இ-ள்.) ஒரு பொருளாகி, பல பொருள்களாகி, பல விதமாகத் தோன் றுகின்ற ஒளியாகி, ஆகாயமாகி, வடிவமாகி, நன்மையாகி, தீமையாகி, வேறு மாகி, இறப்பும் பிறப்பும் அணுகாத தன்மையதாகி, "நிகழ்காலம், இறந்த காலம், எதிர்காலம் ஆகிய முக்காலமுமாய் விளங்கும் என் தந்தையே! எம் பெருமானே," என்று மனம்வருந்தி பசுங்கன்றைப் போலக் கண்ணீர் விட்டுக் கதறியவர்கட்கு, தாய்ப்பசு போன்றாகி, விரைவினில் வந்து திருவருள் புரி யும் கருணை நிலயமே. (எ-று.)

உண்மையாகப் பக்தி பூண்டு மனங்கனிந்து உருகுபவர்களுக்கு ஆண்ட வன் அருள் புரிவான் என்பதை, "எந்தையே!.................விண்ணே" என்ற தொடரில் விளக்கி யிருக்கிறார்.

3. இதனால், மோட்ச நெறியில் தம் மனம் ஈடுபட்டிருக்கும் விதத்தைத் தெளிவாக்குகிறார்.

(இ.ள்.) தலைவனே! உன்னைப் பலவிதமாகத் துதிக்க வாயிருக்கிறது. மோன நிலை கைகூடும் போது, மௌன ரூபியாகிய திருவருள் தாயிருக்கிறாள். மகனாகிய என்னைக் காக்க, சதானந்தமாக விளங்கும் நீ யிருக்கிறாய், அத் தகைய உன்னைத் தஞ்ச மடைவதற்கு நானிருக்கிறேன், வீடு பேற்றை யடை வதற்கு என்உள்ளம் நெருப்பில் பட்ட மெழுகைப்போன்றதல்லவா! (எ-று.)

4. (இ-ள்.) முத்தே! பவளமே! பிரகாசிக்கும் பசும் பொன்னொ ளியே! அறிவே! என் மனத் தெளிவே! பராபரமே! (எ-று.)




# பட்டதாரிகளுக்கு அறிவுரை





இத்தனை வருஷங்களைப் போல், இவ் வருஷமும் சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்புவிழா ஆகஸ்டுமாதக் கடைசியில் நடைபெற்றது. சென்னை சர்வகலாசாலை வழக்கம்போல், நூற்றுக்கணக்கான பட்டம்பெற்ற மாணவ மாணவிகளைச் சிருஷ்டித்து சன்னது கொடுத்து ஆசீர்வதித்து அனுப்பி விட்டது. இனி, பட்டதாரிகளுக்குக் குறைவென்ன ? ஏற்கனவேயுள்ள ஆயிரக்கணக்கான வேலையில்லாது திண்டாடுவோர் கோஷ்டியில் இவர்களுஞ் சேர்ந்து திண்டாட வேண்டியதுதான். அண்ணாமலை சர்வகலாசாலையும், ஆந்திர சர்வகலாசாலையும் வேறு நூற்றுக்கணக்கான பட்டதாரிகளுக்கு முத்திரையிட்டு வெளியே யனுப்பி யிருக்கின்றன. இவை யெல்லாம் ஒன்று சேர்ந்து படித்த வாலிபர்களை மிகச் சங்கடமான நிலைக்குக் கொண்டு வந்து கொண்டிருக்கின்றன.

படித்த வாலிபர்களின் வேலையில்லாப் பிரச்சினையைத் தீர்க்க சர்க்காரோ, கல்வியிலாகா அதிகாரிகளோ முயன்றதாகத் தெரியவில்லை. மற்ற மாகாணங்களி லெல்லாம் வேலை யில்லாது திண்டாடும் படித்த வாலிபர்களுக்கு ஏதோ ஒரு வகையில் பரிகாரந்தேட முயற்சி செய்யப்பட்டு வருகிறது. ஆனால், நம் சென்னை மாகாணத்திலோ இது சம்பந்தமாக எவ்வித முயற்சியும் செய்வதாக நமக்குத் தெரியவில்லை.

பட்டமளிப்பு விழாவில் பட்டதாரிகளுக்குப் பிரசங்கஞ் செய்ய வரும் அறிஞர்க ளெல்லாம், பட்டம் பெற்ற வாலிபர்களை நோக்கி, "நீங்களெல்லாம் கிராமங்களுக்குச் செல்லுங்கள்; அங்கு விவசாயம் முதலிய தொழில்களில் ஈடுபடுங்கள்" என்று ஒரே பாடம் படிக்கிறார்கள். பட்டதாரிக ளெல்லாம் திடீரென்று அங்குபோய் என்ன செய்வது ? இவ்வளவு பேர்களையும் கிராமங்கள் எவ்வாறு தாங்கும்; சமாளிக்கும் என்று நமக்குத் தெரியவில்லை.

மற்றும், தற்போது அமுலி லிருந்து வரும் கல்வி முறையை மாற்றி வாழ்க்கை முறைக்கு ஏற்றபடி செய்தாலாயினும், சர்வகலா சாலைகளில் படிக்கும் வாலிபர்களுக்கு எதிர்காலத்தில் நன்மை பயக்கும். பட்டமளிப்பு விழாப் பிரசங்கஞ் செய்யவரும் பேரறிஞர்களில் பெரும்பாலார் 'தற்போதைய கல்விமுறையை மாற்றி யமைக்க வேண்டும்; மாற்றியமைக்க வேண்டு' மென்று கூறுகிறார்கள்; கல்வி யிலாகா அதிகாரிகளில் சிலரும் இவ்விதமே சமயம் நேர்ந்த போது கூறி வருகின்றனர். இவர்களில் ஒருவராகிலும், எவ் விதம் கல்விமுறையை மாற்றி யமைத்தால் படித்த வாலிபர்களுக்கு வாழ்க்கையில் பயன்தரும்; இவ் வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையை ஒருவாறு சமாளிக்கலாம் என்பதைப்பற்றித் திட்டமாகக் கூறவில்லை. உண்மையாகவே, சென்னை சர்க்காருக்கோ, சென்னை சர்வகலாசாலை அதிகாரிகளுக்கோ படித்த வாலிபர்களின் வேலையில்லாப் பிரச்சினையைத் தீர்க்க பரிகாரந் தேடவேண்டுமென்றோ, தற்கால கல்வி முறையை வாழ்க்கைக்குப் பயன்படும்படி திருத்தி யமைக்கவேண்டுமென்றோ எண்ணமிருந்தால், அவர்கள், கல்வித் துறையிலும், அரசியலிலும் சம்பந்தப்பட்ட பேரறிஞர்களடங்கிய ஒரு கமிட்டியை ஏற்படுத்தி அவர்களைக் கொண்டு ஒரு திட்டத்தை வகுக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும். இவ்விதஞ் செய்ய வேண்டுவது தற்போதைய நிலைக்கு மிகவும் இன்றியமையாததாகும். அது நிற்க,

சமீபத்தில் நடந்த சென்னை சர்வ கலாசாலை பட்டமளிப்பு விழா, இத்தனை வருஷங்களைக் காட்டிலும் ஒருவகையில் விசேஷமானதாகும். இப்போது சர்வகலாசாலை சான்ஸலராக இருப்பவர் ஒரு இந்தியர்; வைஸ் சான்ஸலரும் ஒரு இந்தியர். அதிலும் இவ்விருவரும் சென்னை மாகாணத்தைச் சேர்ந்தவர்களாவர். சான்ஸலர் தற்போது ஆக்டிங் கவர்னராக இருக்கும் ஸர். கூர்மா வெங்கட ரெட்டி நாயுடு அவர்களாவர். அவர் சிறந்த பேரறிஞர்; அரசியல் நிபுணர்; அத்துடன் சுதந்தர உணர்ச்சியு முடையவர். ஆந்திர சர்வகலா சாலை பட்டமளிப்பு விழாவிலும், சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவிலும் அவர் தலைமைவகித்து ஆற்றிய சொற்பொழிவுகள் யாவரும் படித்து மகிழத் தக்கனவாகும். ஆக்டிங் வைஸ் சான்ஸலர் டாக்டர். ஏ. லட்சுமணஸ்வாமி முதலியார் தமக்குக் கிடைத்த சொற்ப காலத்தில் கல்வி யிலாகாவுக்குச் சிறந்த சேவை செய்திருக்கிறார். பட்டமளிப்பு விழாப் பிரசங்கஞ்செய்த பெரியாரோ மேனாட்டுக் கல்வியில் மட்டுமே அறிவைச் செலுத்தியவ ரல்லர்; மேனாட்டு நாகரிகத்தில் மோகங் கொண்டவ ரல்லர். கீழ்நாட்டுக் கலைகளை நன்கு பயின்று உணர்ந்தவர்; கீழ்நாட்டு நாகரிகத்தைப் பிற நாட்டாரும் அறியச் செய்து வருபவர். அவர்தான் சென்னை ராஜதானி கலாசாலை சமஸ்கிருத பண்டிதரும் சென்னை சர்வகலாசாலை நிர்வாகசபையில் அங்கம்

வகித்து வருபவருமான மகா மகோபாத்தியாய—எஸ். குப்புசாமி சாஸ்திரி எம். ஏ. அவர்களாவர். அவர் பட்டதாரிகளுக்குச் செய்த பிரசங்கம் பொருள் புஷ்டி நிறைந்ததாகும். கவைக்குதவாத சர்வகலாசாலை படிப்பால் வரண்டு போயிருக்கும் பட்டதாரிகளின் மூளைகளுக்கு மகா மகோபாத்தியாய—எஸ். குப்புசாமி சாஸ்திரிகளின் அனுபவ மிக்க சொற்பொழிவு குளிர்ச்சியை யுண்டுபண்ணி அவைகளைத் தளிர்க்கச் செய்திருக்கு மென்று நாம் நம்புகிறோம்.

மகா மகோபாத்தியாய சாஸ்திரிகள் தமது பிரசங்க ஆரம்பத்தில், சென்னை சர்வகலாசாலையின் ஆதரவில், பெண்கல்வி விசேஷ முன்னேற்ற மடைந்து வருவதையும், இவ்வருஷம் இரு பெண்மணிகள் முறையே இந்திய சரித்திரத்திலும், தத்துவ சாஸ்திரத்திலும் டாக்டர் பட்டம் பெற இருப்பதையுங் குறிப்பிட்டு, நமது பெண்மணிகள் பெறும் இக் கௌரவத்தில் ஆடவர்களும் பெருமைப்பட வேண்டும் என்று பாராட்டிப் பேசினர். அத்துட னின்றி, அவர் பட்டம் பெற்ற பெண்மணிகளுக்குப் பின்வருமாறு அறிவுரை கூறலானர்:—

"சீதா, சுகன்யா, தமயந்தி, பாஞ்சாலி போன்றவர்கள் இந்தியப் பெண்மையின் இலட்சியங்கள். நமது மகளிர் இதை மனதில் வைத்தல் வேண்டும். இப்போது அவர்கள் பெற்றிருக்கும் கல்வியைக்கொண்டு, பொருளாதார விடுதலையைக் கொண்டாடலாம். ஆடவருடன் எல்லாத் துறைகளிலும் போட்டி யிடலாம். ஆண்களுக்கு ஒரு நீதியென்றும், பெண்களுக்கு ஒரு நீதி யென்றும் சொல்லப்படுவதை எதிர்க்க அவர்களுக்கு உரிமை யுண்டு. கண்மூடித்தனமாக இவ்வழக்கம் எப்படியோ இந்தியாவிலும், வேறு நாடுகளிலும் ஏற்பட்டு விட்டது. படிப்பில்லாத தங்கள் சகோதரிகளை அவர்கள் முன்னேற்றட்டும். இக் காரியங்களை யெல்லாம் செய்தபோதிலும் ஆடவர் பெண்டிர் சமத்துவத்தை யதிகரிக்கும் பிரச்சினை மிகவும் நுட்பமான தென்பதை அவர்கள் மறந்து விடலாகாது. நற்காரியங்கள் எல்லாவற்றிலும் மகளிர்க்கு மிகுந்த சுதந்தரமும், தீயகாரியங்களில் ஆடவர்க்கு நிர்ப்பந்தங்களும் ஏற்படுத்தினல் சமூகத்திற்கு நன்மை தரத்தக்க சமத்துவம் தோன்றும். இந்திய நாகரிகத்தின் உயிர் நாடியே குடும்பமாகும். இந்தக் குடும்பம் ஒழுங்காக நடை பெறுவதற்காகவே, விவாகமுறை யேற்பட்டிருக்கிறது. இதை மறக்கும் நாள் இந்தியாவுக்கு கெட்டநா ளாகும். இப்போது பட்டம்பெற்ற பெண்மணிகள் இந்திய மகளிர் கல்வி முன்னேற்றத்தில் விசேஷ சிரத்தை காட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள்."

தமது வைதீக மனப்பான்மையையும் விட்டுக் கொடுத்து மகா மகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரிகள், கால தேச வர்த்தமானத்தை யொட்டி பெண்கள் பிரச்சினையைக் கவனித்து பிரசங்கஞ் செய்திருப்

யது போற்றத் தக்கதாகும். அவரது அறிவுரையைக் கவனித்து நடக்கவேண்டியது நமது படித்த பெண்மணிகளின் இன்றியமையாத கடமையாகும். ஆண்—பெண் சமத்துவத்தைப்பற்றி அவர் கூறியுள்ள நுட்ப மொழிகள் வைதீகர்களும் சீர்திருத்தக் காரர்களும், ஆடவரும் மகளிரும் கவனிக்கத் தக்கதாகும்.

அடுத்தபடியாக, மகா மகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரிகள் பட்டம்பெற்ற ஆடவர்களுக்குப் புராதன குருகுலவாசக் கல்வி முறையை ஞாபகமூட்டிப் பேசியிருப்பதுஞ் சீர்தூக்கி யாராயத் தக்கதேயாகும். "கல்வியின் மூலம் நீங்கள் காலக்கிரமத்தில் ஆக்க வேலைகளைச் செய்வீர்களென்று உபநிஷதங்கள் எதிர்பார்க்கின்றன. இச் சர்வகலாசாலையில் நீங்கள் பெற்ற கல்வியைச் சரியான முறையில் விநியோகித்து ஏற்றவாறு நடந்து கொள்ளவேண்டும். ஆகவே, நீங்கள் பெற்ற கல்வி ஒரு தர்ம சோத்தாகும். நமது பழம் பெருமையை யொட்டி நாம் நடந்து கொள்வது அவசியம். பழமையே சிறந்ததென்றும், நவீனம் முற்றிலும் கேவலமானதென்றும் அறிவாளியா யிருப்பவன் எவனுங் கூறமாட்டான். இந்தியாவின் நாகரிகம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பாஷைகளில் இயற்றப்பட்டுள்ள நூல்களிலும் பொதிந்து கிடக்கின்றன. ஆகவே, ஒவ்வொரு மாணவனுக்கும், வடமொழியும், தென்மொழிகளில் ஒன்றும் தெரிந்திருக்க வேண்டும்" என்ற அவரது உபதேசம் யாவராலும் வரவேற்கத் தக்கதே யாகும். மேனாட்டுக் கல்வியைப் பயில்விப்பதோடு தேசபாஷையையும், தாய் பாஷையையும் கற்றுக் கொடுக்கவும் நமது சர்வகலாசாலை ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும், இந் நன்முயற்சிக்குச் செல்வந்தர்கள் உதவி செய்ய முன் வரவேண்டும் என்றும் கேட்டுக்கொண்ட அவரது விண்ணப்பம் பலன் பெற வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கிறோம்.

இப்போது எங்கு பார்த்தாலும், சமதர்ம முழக்கமும், பொதுவுடைமைப் பிரசாரமும் நிலவி வருவது யாவருக்குந் தெரிந்த விஷயம். சமதர்ம உணர்ச்சியும், பொதுவுடைமைப் பித்தும் நமது வாலிபர்கள் பெரும்பாலரர் உள்ளத்தைக் கலக்கி வருகிறது. அவர்கள் இவ் விஷயங்களில் தவறான வழியில் செலுத்தப்படுகிறார்கள். அவர்களை மேற்படி, விஷயங்களில் உள்ள உசிதா உசிதங்களை யுணர்ந்து நடக்கும்படி செய்யவேண்டியது அறிஞர்களது கடமை யாகும். மகா மகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரிகள் இக் கடமையைச் செய்யத் தவறவில்லை. அவர் பொதுவுடைமையைப்பற்றிக் கூறுகையில்,

> "நம்முடைய பழைய சம்பிரதாயங்களையும், சரித்திரத்தையும் கவனித்து நாம் நடக்கவேண்டும். கேவலம் இலட்சிய வாதிகள் காணும் பகற்கனவில் மயங்கிவிடலாகாது. சோவியத் ருஷியா ஆனந்தமயமாக இருக்கிறதென்று சிலர் கூறுவதை நீங்கள் கேட்

டிருக்கலாம். ஆனல் கார்ல் மார்க்ஸின் லோகாயத வாதத்தை யும், வகுப்புத் துவேஷத்தையும், நிரீசுவர வாதத்தையும் அடிப் படையாகக் கொண்டிருக்கும் வகையில் பொதுவுடைமையும், சமதர்மமும் நல்லவையாக இருக்கமாட்டா. இப்புதிய பரீட்சை களி லிருந்து விலகியிருப்பதே நன்மையாகும்"

என்று அதிலுள்ள குணகுணங்களை எடுத்துக்காட்டி யிருக்கிறார். ஒவ்வொரு வாலிபரும் இதிலுள்ள உண்மையை அறிய வேண்டு மென்று நாம் விரும்புகிறோம்.

சாஸ்திரத்துக்கும் சமய(மத)த்துக்கும் நெருங்கிய ஒற்றுமை யிருக்க வேண்டியது அவசியம் என்பதை அறிவுறுத்துவதற்காக மகா மகோபாத்தியாய சாஸ்திரிகள், "சாஸ்திரக் கல்வி இயற்கையை வெல் லுவதற்காக ஏற்பட்ட தென்று கருதலாகாது. சாஸ்திரத்துக்கும் சமயத்துக்கும் நெருங்கிய ஒற்றுமையிருக்க வேண்டும். ஆயிரம் ஆண் டுகளுக்கு முன், ஹுசேன் அலி என்பார் நட்சத்திரங்களின் உயரத் தையும், சூரியனின் உயரத்தையும் அளக்க ஒரு கருவியைச் செய்தார். அதன் நுனியில், 'கடவுளின் ஊழியனை இயந்திரகர்த்தன் ஹுசேன் அலி செய்தது; கடவுளின் நாமம் உலகெங்கும் பரவுக' என்று எழு தப்பட்டுள்ளது. இதில் ஹுசேன் அலியின் திறமையும் பயிற்சியும், தன்னலமற்ற தன்மையும் ஈஸ்வர பக்தியும் ஒருங்கே புலப்படும்." என்று கூறியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

கடைசியாக, மகாமகோபாத்தியாய சாஸ்திரிகள் தமது பட்ட மளிப்பு விழாப் பிரசங்கத்தின் போது, சீர்திருத்த வாதிகளுக்கு ஒரு செய்தி விடுத்திருக்கிறார். "கேவலம் உலகத்தைச் சீர்திருத்துவதே நோக்க மென்றிருத்தல் மட்டும் அமையாது. எந்தச் சீர்திருத்தத்தி லும் ஆக்க வேலையும் சேர்ந்திருக்க வேண்டும். பிறர் குற்றங்களைக் காணுதலால் பயனில்லை. எது சரியான காரியமென்று கண்டு பிடித்து அதை ஊக்க வேண்டும். அதற்கு வலிமையை அளிக்க வேண்டும். இந்திய நாகரிகத்தில் இத்தகைய நல்லம்சங்கள் எவ்வளவோ இருக் கின்றன." இவ் வாசகங்கள் சீர்திருத்த வாதிகளுக்குச் சிறந்த வழி காட்டுவதாக இருக்கும் என்பது நமது நம்பிக்கை,

பொதுவாக, சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவில் சொற்பொழிவாற்றிய மகாமகோபாத்தியாய—குப்புசாமி சாஸ்திரி கள் பிரசங்கம், பட்டம் பெற்ற மாணவர்களுக்குச் சிறந்த அறிவுரை யாகும். இப் புது பட்டதாரிகள் சர்க்கார் உத்தியோகத் தையோ மற்ற குமாஸ்தாத் தொழிலையோ மட்டும் தேடியலைந்து, ஏற்கனவேயுள்ள வேலையில்லாதார் கோஷ்டியில் சேர்ந்து கஷ்டப் படாது, வேறு வகையில், தங்கள் வாழ்க்கையைச் சுகமாக நடத்துவ தற்கு வழி தேடிக்கொண்டு, நாட்டு நலத்துக்கும் பாடுபட வேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

# மழை

(தே. ப. பெருமாள்.)

### கும்மி

வானக் குளிரடி பட்டு வந்தேன்—வெண்மை
வார் குழலாகவே நீண்டு வந்தேன்.
கானச் சுவையினைப் பெய்து வந்தேன்—பெருங்
காற்றுடனே கலப் பாகி வந்தேன். (1)

மாமலை தட்டிச் சிதறி வந்தேன்—இந்த
மாநிலங் கண்டு மகிழ வந்தேன்.
பாமலர் கட்டும் புலவர்கூட்டம்—நல்ல
பாமாலை கட்டப் படிந்து வந்தேன். (2)

காமரு சோலை களிக்க வந்தேன்—எழில்
காடுகள் நற் கவினுற வந்தேன்.
மாமலை மேடும் கடந்து வந்தேன்—நீண்ட
மாநதி யாகவே ஓடி வந்தேன். (3)

சோலைக் குயில்கள் மகிழ்வு பெற—நெடுஞ்
சோதி மயக்கி இருண்டு வந்தேன்.
நீலக் குளக்கரைத் தேரை யெல்லாம்—குரல்
நீட்டி புலம்பிடக் கேட்டு வந்தேன். (4)

இடியுடன் மின்னல் கொண்டு வந்தேன்—அந்த
ஏழை உழவன் மகிழ வந்தேன்.
படியும் நிலங் குளிராக வந்தேன்—பெரும்
பாலை நிலப்பசி போக்கி வந்தேன். (5)

ஏரிகுள அன்பர் என்னைக் கண்டால்—மன
ஏக்க மகற்றியே இன்பங் கொள்வார்.
தேரைக் கொடிக் கீந்த பாரியினும்—நல்ல
தெய்வப் புகழையே பின் பெறுவார். (6)

வாச மலரை மணந்து வந்தேன்—அந்த
வள்ளிக் கொடியைத் தழுவி வந்தேன்.
நேசக் கிளைஞர் பலரிடையே—வாழ்வின்
நேர்மைப் பயனை வினவி வந்தேன். (7)

கற்புடைப் பெண்டிரை கண்டு வந்தேன்—அவர்
காதல் மொழியினைக் கேட்டு வந்தேன்.
வெற்புடைக் காவலர் நீதி தனை—வானோர்
வீறுடன் கூற விரைந்து வந்தேன். (8)

# ஓங்கார தத்துவம்

———(0)———

"கலா ரஸிகன்"

ஓம் என்னும் ஒப்பற்ற மொழியான ஓங்கார தத்துவம் ஆராய்ச்சிக்கு அடங்காது. எனினும், சிவாநுபூதிமான்கள் இதுபற்றி யருளி யுள்ள அருள் மொழிகளைத் துணை கொண்டு இதன் தத்துவத்தை யறிய முயல்வது தவறாகாது என்று எண்ணுகிறேன்.

வேதங்கள் முழுவதும், வேதாந்த மெல்லாம், மற்ற சாஸ்திரங்கள் எல்லாம் இந்த 'ஓம்' என்ற வார்த்தையுள் அடங்கியுள்ளன. இந்தியாவில், பல சமயங்கள் உள்ள போதிலும், எல்லா சமயத்தவரும் 'ஓம்' என்ற மந்திரத்தை மனப்பூர்வமாக அங்கீகரிக்கின்றனர். முகம்மதியர்களும் கிறிஸ்தவர்களும் கூட பிரார்த்தனைகள் நடத்தும் பொழுது முடிவில் 'ஆமன்' என்று முடிக்கின்றனர். முகம்மதியர் 'ஆமன்' என்றுது 'ஆமீன்' என்கின்றனர். தெய்வ பிரார்த்தனைகளில் எல்லாம் 'ஆமன்' அல்லது 'ஆமீன்' என்பதானது வேதாந்தத்தின் சரியான பொருளையே தருகின்றது. அதாவது "சொற்கள் முடிவடையும் இடம்" வேதாந்தத்தின் சாரமான 'ஓம்' என்பதையே எறக்குறைய உணர்த்துகின்றது. ஹிந்துக்களில் வேதாந்த முழுமையும் 'ஓம்' என்ற மந்திரத்திற்குள் அடங்கிவிடும். வேதாந்தங்களில் 'ஓம்' என்பதானது 'அ-உ-ம்' என்ற எழுத்துக்களின் சேர்க்கையேயாம். அ என்ற அட்சரம் வேதாந்த சாஸ்திரப்படி ஜட சம்பந்தமான பிரபஞ்சத்தைக் குறிக்கும். நாம் விழித்துக் கொண்டிருக்கையில் தெரியக் கூடியதெல்லாம், சொப்பன அவஸ்தையில் அனுபவிப்பது எல்லாம், 'உ' என்ற எழுத்தால் அறிவிக்கப்படும். 'ம்' என்பது அறியப்படாதவைகளைக் குறிக்கும். இவ்விதம் 'அ-உ-ம், என்ற மூன்று எழுத்துக்களும் மூன்று வித அவஸ்தைகளின் அனுபவங்களை குறிக்கும். அதாவது இவற்றில் உலகம் முழுவதும் அடங்கியுள்ளது. இவ்வாறாக 'ஓம்' என்பது எல்லாம் சேர்ந்த ஒன்றையே குறிக்கின்றது.

'அ' என்பதால் குறிக்கப்படும் விழித்திருக்கும் பொழுது நாம் அறியும், உலகம், மற்ற இரண்டு காலங்களாகிய சொப்பன அவஸ்தை காலத்திலும், அறியப்படாத காலத்திலும் கூட வியாபித்திருக்கின்றது என்பது வெளிப்படை. ஆனால் அது நமக்கு அச்சமயம் முழுமையும் மறைந்து விடுகின்றது. அப்படியிருந்தும் அப்பொழுது கூட நம் ஆத்மா நம்மிடமே இருப்பதை காண்கின்றோம். புத்தியும் பிரக்ஞையும் அடங்கியுள்ள காலத்தும் உண்மையான ஆத்மா நம்மிடம் அப்படியே இருக்கின்றது. மாற்ற முடியாததும் சலிக்காததுமான தத்துவம் இந்த உண்மை நிலை மூன்று வித காலங்களிலும் வியாபகமாய் இருக்கின்றது. இதுவே 'ஓம்' என்பது.

எல்லாவகையான உணர்ச்சி அல்லது அறிவு உண்டாவதற்கு காரணம் அனுபவமே ஆகும். அனுபவம் விழித்த நிலையில் மட்டுமன்றி தூங்கும் நிலையிலும் உண்டாகலாம். வெளிக் கண்களும் காதுகளும் தூங்கும் நிலையில் வேலை செய்யாத நிலையில் இருந்தும், சொப்பன உலகில் அறியப்படும் பொருள்களையும் அவற்றிற் கேற்ப இந்திரிய கருவிகளையும் ஒரே காலத்தில் நாம் சிருஷ்டித்துக் கொள்ளுகின்றோம். அதனால் சொப்பனத்தில் அறியப்படும் பொருள்களும், அவைகளை அறிய ஏதுவாய் இருக்கும் இந்திரியங்களும், ஏக காலத்தில் ஜனிக்கின்றன. இப்படி அறிபவனும் அறியப்படும் விஷயங்களும் எந்த உண்மைப் பொருளின்மேல் எழும் அலைகளோ, அந்த உண்மைப் பொருளே ஆத்மா அல்லது 'ஓம்' என்று வேதங்களில் குறிக்கப் படுகின்றது.

சொப்பன காலத்தில் நாம் அறியும் விஷயங்கள் விழித்த நிலையில் காணாது ஏமாறுகின்றோம். அப்படியே விழித்திருக்கும்போது நாம் காணும் உலகம் தூக்கநிலையில் நாம் காணுவதில்லை. இப்படி நாம் நோக்கும்பொழுது விழித்த நேரத்திலும் சொப்பன நேரத்திலும் நாம் காணும் உண்மைப் பொருள் அதாவது சத்தியநிலை பலிக்க காணோம். எப்பொழுதும் விடாமல் தொடர்வதே சத்தியநிலை. ஐரோப்பிய தத்துவ சாஸ்திரிகளுள், மேலான புகழ்வாய்ந்த ஹர்பர்ட் ஸ்பென்ஸர் என்பார் உண்மை அல்லது சத்தியம் என்பதை விளக்கும்பொழுது ஒரு காலத்தில் தோன்றி சாயைபோல மறைவது எதுவோ அதுவே மாயை ஆகும் என்கின்றார். "ஓம்" என்ற வார்த்தையுள் அடங்கியிருக்கும் அகாரம் நாம் விழித்திருக்கும் நிலையில் காணும் உலகைக் குறிக்கின்றது. சில சமயங்களில் அந்த அகாரம் மாத்திரை அல்லது உருவம் என்பதைக் குறிக்கும். ஆனால் ஓம் என்பது உருவத்துடன் நிற்பதில்லை. சத்தியப் பொருளையே அது குறிக்கின்றது. உருவங்களில் எல்லாம் ஊடுருவிச் செல்லும் உண்மைப் பொருளையே குறிக்கின்றது. வாழ்க்கையாவது என்ன? சொப்பன நிலையா? நல்ல தூக்கநிலையா? அல்லது விழித்திருக்கும் நிலையா? இவையெல்லாம் வெறும் தோற்றங்களே! உண்மையான சத்திய வாழ்க்கை நம் ஆத்மாவே! அந்த ஆத்மாவே "ஓம்" என்பதால் குறிக்கப்படும். நித்தியமான உண்மைப் பொருளே "ஓம்" சத்தியமான ஆத்மாவே நாம் ஆகின்றோம்.

வேதம் என்பது இருவகை பொருள்படும். அதன் ஆதிப்பொருள் ஞானம் அல்லது சுவர்க்கசுகம். மற்றொரு பொருள் சாஸ்திரங்கள். சமுத்திரத்தின் அடிவாரத்திற்கு வேதங்களை கொண்டு ஓடிய அசுரன் சங்காசுரன் (ஹிரணியாட்சன்) சங்கத்தில் வசிக்கும் அசுரன் அல்லது 'சங்கினுள் இருக்கும் பூச்சி' என்பதேயாகும். வேதங்களை கொணர ஈஸ்வரன் மச்சாவதாரம் எடுத்தார். அசுரனிடம் சண்டைபோட்டு அவனைக் கொன்றார். வேதங்களை உலகிற்குத் திரும்ப கொடுத்தார். இக்கதையைப் படித்துவிட்டு நாம் அப்படியே பொருள்கொண்டு நாம் மூடக்கொள்கையில் மூழ்கி விடுகின்றோம். ஆனால் அதன் உட்பொருள் அதாவது தத்துவார்த்தம் என்ன என்பதை ஆராய்வோம். சங்கு பூச்சியினிட மிருந்து வேதங்களைக் கொணர ஈஸ்வரன் மச்சாவதாரம் எடுத்தார். மச்சாவதாரமாகி, அசுரனாகிய, சங்குபூச்சியைக் கொன்றார். இதன் பொருள் என்ன? மச்சம் கடலில் வசிப்பது. சங்கினுள்ளும் கடலில் வசிக்கும் ஒரு ஜீவஜந்து உளது. மச்சம் சங்கினுள் வசிக்கும் பூச்சியை ஆகாரமாகக் கொன்று தின்றது. பூச்சி சங்கினின்றும் விரட்டப்பட்டது. அலைகள்

சங்கை கடலோரம் ஒதுக்கின. ஜனங்கள் அதை எடுத்தனர். ஊதினர். அதினின்றும் "ஓம்" என்ற சப்தம் கிளம்பியது. இதுதான் வேதம். இந்த பொருளில் சங்கமமாகும் வேதம் சமுத்திரத்தினின்றும் வெளியே கொண்டுவரப்பட்டது.

இந்த கதை கூறிய மகான் "ஓம்" என்ற மந்திரத்தின் பெருமையை விளக்கவே இதை இவ்விதம் ஆராய்ந்தார். ஜனனம், மரணம், தெய்வ வணக்கம், யுத்தம் என்ற காலங்களில் எல்லாம் "ஓம்" என்ற சப்தத்தைச் சங்கின் மூலம் ஜெபிக்கின்றனர்.

"ஓம்" என்பது ஒரு குறிப்பிட்ட பாஷைபல்ல, குழந்தை பிறக்கும்பொழுதே 'ஊம்' 'ஓம்' 'ஆம்' என்று அழுகைக் குரலுடனேயே ஜெனிக்கின்றது. ஒவ்வொரு குழந்தைக்கும் 'ஓம்' என்ற தொனி உள்ளிருந்தே கிளம்புகின்றது. சந்தோஷமாய் இருக்கும் காலங்களிலோ ஆச்சர்யத்தின் மெய் மறதியாலோ சகிக்கமுடியாத உபத்திரவத்தை அனுபவிக்கும்பொழுது உதடுகளின் வழியே வெளிவரும் தொனி "ஓ" என்பதே ஆம். அது "ஓம்" என்பதன் சுருக்கமே. நோயாளிகளும் கஷ்டப்படுவோரும் அந்நிலையில் கூறும் 'ஓ ஓ அல்லது உம் உம்' என்றவைகள் 'ஓம்' என்பதின் சிதைவுகளே. நோயாளிகள் அவஸ்தைப் படும்பொழுது இதைக் கூறுவதினால் சிறிது ஆறுதலடைகின்றார்கள். இந்த தொனியை உச்சரிப்பதனால் மட்டுமே அவன் ஆறுதலடைந்தால் ஒழுங்காக இதை உச்சரித்து வந்தால் சாந்தமும் ஒழுங்கும் நம்மிடை ஏற்படும் என்பதில் ஐயமுண்டோ! ஸ்வாமி ராமதீர்த்தர் கூறியுள்ளபடி மூக்கினின்றும் சாதாரணமாக வெளிப்படும் ஸ்வாசத்திற்கு ஒருபதம் வேண்டுமாயின் அது 'ச ஓ ஹம்' என்பதாகும். இதைக் கவனியுங்கள் 'ச ஓ ஹம்' சமஸ்கிருத பாஷையின் இலக்கணம் மற்ற பாஷைகளைவிட பூர்ணத் தன்மை வாய்ந்தது. எல்லா தொனிகளும் வார்த்தைகளும் பூரணமாக ஆராயப்பட்டிருக்கின்றன. மகாரம் மெய்யெழுத்தெனப்படும். ஆனால் நாசி சம்பந்தப்பட்டவரை மெய்யெழுத்தும் உயிரெழுத்துப் போன்று தனியே இயங்கத்தக்கது. 'ஓ ஆ' என்பன உயிரெழுத்துகள். 'ச ஹ' என்பன தனி மெய்யெழுத்துகள் தனி மெய்யெழுத்துகளை (உடலை) உதறிவிட்டால் நமக்கு கிடைப்பது 'ஓ அம்' இதுதான் 'ஓம்' மெய்யெழுத்துகள் இவ்வுலகில் நாமரூபங்களை குறிக்கின்றன. எல்லா நாமரூபங்களும் இயக்கங்களின் சேஷ்டைக் கருவியானாலும் அவற்றைத்தாங்கி நிற்கும் ஸ்திரப்பொருளாக அழியா வஸ்துவின்றி விளங்க மாட்டா. இப்படி தாங்கி நிற்கும் பொருள் தான் பிரம்மம். அதுவே 'அ உ ம்' என்ற தொனிகளால் விளக்குகின்றோம். இவ்விதம் சோஹம் என்பதில் 'சஹ' என்ற மெய்யெழுத்துகள் மாறுகின்ற நாமரூபங்களையும் இயற்கை தொனியாகிய "ஓம்" என்பது அவற்றை தாங்கி நிற்கும் உண்மை பொருளையும் குறிக்கின்றது.

உவமானமாக வைரத்தை எடுத்துக் கொள்வோம். எவ்வளவு உயர்வாக ஜ்வலிக்கின்றது. இரும்பினாலும் லகுவில் வெட்ட முடியாது; அவ்வளவு கெட்டி. பிறகு கரியை எடுத்துக்கொள்வோம். எவ்வளவு மிருதுவாய் இருக்கிறது. அன்றி அசங்கியமாகவும் தோன்றுகின்றது. வீணான உபயோகமற்ற வஸ்து. ஆனால் உண்மையில் இரண்டும் ஒரே வஸ்து. இரண்டும் 'கார்பன்' என்னும்

பொருளே. ஆனால் அணுக்கள் ஒன்றில் ஒரு மாதிரியாகவும் மற்றொன்றில் மாறுபட்டும் காணப்படுகின்றது.

அதே மாதிரி நாமரூபங்களால் மாறுபட்டு தோன்றும் பலவித பிரிவுகள் உண்மையில் அவற்றைத் தாங்கி நிற்கும் மாறுதல் இல்லாததும் நித்தியமானதும் சலிப்பற்றதும் ஒப்பற்றதுமான வஸ்து ஒன்றிலேயே முடிவடையும். வித்தியாசங்கள், பிரிவுகள் தனிமைகள் என இவற்றைத் தாங்கி நிற்கும் சக்திக்கு சாதாரணமாக இயற்கையாகவே பொருந்திய பெயர் 'ஓம்' என்பதால் குறிக்கப்படும். உண்மையின் இயற்கைப் பெயரே இதுதான்.

உலகமும் தொனியும் ஒரு வஸ்துவுக்கு சமானம். இரண்டும் இருவித தன்மைகளே. பைபில் கூறுவதாவது "ஆதியில் இருந்தது வார்த்தை (தொனி), வார்த்தையும் கடவுளிடம் இருந்தது. வார்த்தையே கடவுளாயிருந்தது." இப்பொழுது உலக முழுமையும் குறிக்க ஒரு வார்த்தை வேண்டும். எல்லா பாஷைகளிலும் தொனி ஒருவிதம் தான், சில தொண்டையில் இருந்தும் சில அண்ணங்களில் இருந்தும் சில உதட்டினின்றும் வெளிக்கிளம்பும். எந்த பாஷையிலும் ஒரு தொனியும் தொண்டையின் கீழிருந்து உற்பத்தியாகாது. தொண்டையே தொனி கிளம்பும் பிரதேசங்களின் ஒரு எல்லை. மற்றொரு எல்லை உதடு. உதட்டின் வெளியிலிருந்தும் ஒரு வார்த்தையும் வெளிக்கிளம்பாது 'அகர' 'உகர' 'மகாரங்களில்' 'அ' தொண்டையிலிருந்தும் 'ம' உதட்டில் இருந்தும் (நாசி சம்பந்தமான) வரும் தொனிகள்; ஆகவே ஓம் என்பது இயற்கையில் பூர்த்தியாகும் ஓர் தொனி. ஆனால் இங்கு ஓர் கேள்வி. தொண்டையில் இருந்து அகாரத்தைபோல எவ்வளவோ வார்த்தைகள் கிளம்பக்கூடும். அப்படியே மற்ற ஸ்தானங்களிலிருந்தும் வெவ்வேறு தொனிகள் கிளம்ப முடியும். ஏன் இந்த மூன்றை மட்டும் எடுக்கவேண்டும் என்ற கேள்வி எழலாம். ஆனால் இந்த மூன்று மட்டுமே இயற்கையில் இலேசாக உற்பத்தியாவன. ஊமையிடமும் இத்தொனிகள் கிளம்பும் ஆதலின் "ஓம்" என்பதைவிட பூர்த்தியான தொனி வேறில்லை. எல்லா பாஷைகளுக்கும் பொதுவான தொனி இதுவேயாம். ஹிந்துக்களின் தத்துவ முழுவதும் வேதாந்தமெல்லாம் இந்த ஓம் என்பதின் வியாக்கியானமே. தொனிகள் வர்ணாத்மிகம் தியானாத்மிகம் என இரு வகைப்படும். வர்ணாத்மிகம் என்பது எழுத்துக்கு வரக்கூடிய தொனி. இதற்கு எதிரிடை தியானாத்மிகம்; அதாவது உணர்ச்சி ஒன்றினால் மட்டுமே அறியக்கூடியது தியானாத்மிகம் எனப்படும். இது எழுத்து மூலமாய் விளங்காது. இந்த 'உணர்ச்சி' எல்லா பாஷைகளுக்கும் பொதுவானது. ஆனால் வர்ணாத்மிகம் அப்படியல்ல, இயற்கையான பாஷை எங்கும் அறியப்படும். அதேமாதிரி சங்கீதம் யாவராலும் அறியப்படுவது. அது உணர்ச்சி ஊட்டவல்லது. வசீகரிக்கும் சக்தி வாய்ந்தது. "ஓம்" என்ற தொனியும் உச்சரிப்பவரிடம் மனோதிடம் உண்டாக்கி தியான பலத்திற்கு வழி காட்டியாக நிற்கின்றது. தென்னாட்டு தேசியக்கவி பாரதியாரும் "ஓம் சக்தி; ஓம் சக்தி ஓம்" என்று "ஓம்" என்ற மகாமந்திரத்தின் பெருமையை பாடியுள்ளபடி அதை நாமெல்லாம் தியானித்து உய்யும்படி ஆண்டவன் அருள் பாலிப்பாராக.

---

# நெப்போலியனது மொழிகள்

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை)

[கீழ்க்காணும் மொழிகள் நெப்போலியனது கடிதங்களி லிருந்தும், பேச்சுகளினின்றும், மந்திரிகளுக்கும் மற்றும் அதிகாரி களுக்கும் அனுப்பிய உத்தரவுகளிலிருந்தும், ஞாபகக் குறிப்புகளி லிருந்தும் திரட்டி எடுக்கப்பெற்றன.]

நான் நிச்சயமான நன்மையே யன்றி கற்பனையாகிய மேன்மையை நாட வில்லை.

***

ஆபத்தான நிலைமையில் ஐம்பது பேர் கூடி ஒருவகையான அரசியலை நிருமித்தால், அதனால் பொது மக்களுடைய உரிமைகள் அழிந்துவிடாது. பொது மக்களின் ஆட்சி அழியாதது.

***

கற்பனையினாலே உலகம் நடைபெறுகிறது. நமது தற்கால அரசாங்க முறையின் தீமை யாதெனில், மனோ வியாபகத்துக்கு இடங்கொடாமையே யாம். அஃதின்றி மானிடர் ஆளப்படக் கூடியவரல்லர். மனோ வியாபக மில்லையேல், மனிதர் மிருகங்களுக் கொப்பாவர்.

***

உறுதியான அரசாங்கத்தை நிலை நிறுத்துவதற்கு ஜனங்களுக்கு உண் மையான பிரதிநிதித்துவம் அதில் ஏற்படவேண்டும். அப்போதுதான் அவர் கள் அந்த அரசாங்க முறையை ஆதரிப்பர். இல்லாவிடில் அவர்கள் விரோத மாகவும், அலட்சியமாகவும் இருப்பார்கள்.

***

உலகில் இரண்டு வகையான சக்திகளேயுள. அவையாவன:—வாளும்; மனமுமே. கடைசியில் வாள் பலம் மனோ பலத்துக்குத் தோற்றுவிடுகிற தென்பதை நாம் எப்போதும் காண்கிறோம்.

***

சாமான்ய அரசாட்சி முறையில் இராணுவ அதிகாரம் பயனற்றதும் தகாததுமாகும். முன்னதில் பின்னது போய்ப் புகுந்தால் உண்டாவது குழப்பமேயாகும். யாதொரு அரசாங்க முறையும் சுத்தமாகவும் சாதாரண மாய் உணரமுடியாததாகவு மிருக்க வேண்டும்.

***

தந்தையைப் போலிருப்பதாகப் பாவனை செய்கிற அரசாங்கத்தைப் போல் கொடுமையானது வேறொன்றுமில்லை. பிதாவின் அன்பு இயற்கையிலேயே உற்பத்தியானதாகும். அந்த அன்பைப்போல் நடிக்கவியலாது.

***

கூடுமான வரையில் அதிகார தோரணை ஜனங்களை பாதிக்காதபடியும், அவர்கள் மீது அனுவசியமாகப் பளுவா யிராமலும் பார்த்துக்கொள்ளவேண்டும்.

***

சட்டமானது பொதுவான நடை முறையை விதிப்பதோடு நின்றுவிட வேண்டும். எல்லா விவகாரங்களையும் எதிர்நோக்க முயற்சிப்பது பயனற்ற வேலையாகும்.

***

நிர்வாக அரசாங்கமானது ஆலோசனை செய்வதற்குப் பதிலாக வேலை செய்யவேண்டும்.

***

போலீசாரின் சாமார்த்தியம் வீணான காரியங்களைப் பின்பற்றி ஆராய்ந்து கண்டுபிடிப்பதிலில்லை.

***

அபிப்பிராய சுதந்திரமே இக்காலத்தின் முக்கியமான வெற்றியாம்.

***

நீதிபரிபாலனம் தாட்சண்யத்துக் குட்படும் நாட்டில் சமூக ஒழுங்கு என்பது காணப்படாது.

***

நல்ல சட்டங்களும், நிர்த்தாட்சண்யமான நீதி மன்றங்களும் ஜனங்களது சந்தோஷத்துக்குக் காரணங்களா யிருப்பனபோல் வேறெதுவுமில்லை.



# "நிலையாச் செல்வம்."

[தமிழ் மாணவர்—எஸ். கே. ராமசாமி பிள்ளை.]

இது நிலைத்தல் இல்லாச் செல்வம் என பொருள் படும். செல்வம், கிடைத்தபோது விரைவில் தருமத்தினைச் செய்வதற்குக் கருத்துண்டாதற் பொருட்டே இது இங்கு விவரிக்கப்படுகிறது. ஏனெனில், நிலையாதவற்றை யுணர்ந்தாலன்றி நிலையுடைய பொருளில் மனம் செல்லாது.

செல்வம் என்னும் சொல்லினை நன்கு ஆராய்ந்தால் செல்வோம் என்னும் பொருளில் வரக்காணலாம். ஆகலினால் செல்வத்தின் நிலையாமையை யுணர்ந்து, நாம் அதனிடத்தில்—கொண்டுள்ள அளவற்ற பற்றை ஒழித்தல் வேண்டு மென்பது நன்கு புலனும்.

அறுசுவையோடு கூடிய அன்னத்தை தனது மனையாள் ஊட்ட ஒருபிடி சாதம் உண்டு மறுபிடியை தடுத்த பெருஞ் செல்வத்தவரும், அவரது தனிக நிலைமையினை யிழந்து தரித்திரர்களாய் வேறொரு இடத்திற்குச் சென்று கூழைப் பிச்சை எடுத்துண்பர். நம்மிடம் அச்செல்வம் கிடைத்தபோதே பல் லோருக்கு மீந்து நன்கு உண்டு இருத்தலே ஏற்புடைத்தென கூறினமை யின் செல்வம் நிலையற்றதென்பது விளங்கும். இன்னும் திருவள்ளுவரும்,

"அற்கா இயல்பிற்றுச் செல்வ மதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்"

என்றதனால் செல்வம் எய்திய ஞான்றே அறத்துறைகளில் அதை உபயோகித் தல் வேண்டுமென்பது புலனுகின்றது.

பெரிய நிலையினின்று எண்ணற்ற செல்வத்தினை அடைந்தாரும் தங்க ளிடம் கலி வந்தக்கால் தங்களது செல்வத்தினை இழந்து தரித்திரர்களாய் மனைவி மக்களைத் தோற்று நிலையற்று அல்லற்படுதலை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இன்னும் நமக்கு எல்லாம் வல்ல பரமன் நியமித்துள்ள வாழ் நாட்கள் தினமும் கழிந்து தேய்பிறையே போல் நாம் விரைவினில் வயோதி கத்தை அடைகிறோம். நமது இளமையும் யாக்கையும் எவ்வாறு நிலையற்ற தோ அஃதேபோல் பொருளும் நிலையற்றது என்னும் உண்மையை,

"நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந் திரைகள் நீரில்

எழுத்தார்கும் யாக்கை நமரங்காள் என்னே!
வழுத்தாத தெம்பிரான் மன்று"

என்னும் அருமைப் பாடலால் குமரகுரு ஸ்வாமிகள் எடுத்துக்காட்டி யிருப்பதை நாம் கடைப்பிடித்தல் வேண்டும்.

இந்நாளில் செல்வந்தர்கள், எல்லோரையும் ஒன்றாக மதித்து ஏற்பவற்கு ஈபவர் மிகச் சிலரேயாவர். பச்சையப்ப முதலியார், கல்வல கண்ணன் செட்டியார், ஜம்லெட் ஜிஜீ பாய், முதலிய நல்லறிஞர்கள் தங்கள் செல்வத்தினைத் தான தருமங்களுக்குப் பயன்படுத்தி யிருக்கின்றனர். அவர்களைப் போன்று, இக்காலத்துள்ள செல்வ சிகாமணிகளும் நடப்பார்களாயின், நமது இந்திய மாதா நன்கு மகிழ்வாள்—தமிழன்னையும் ஆனந்தக் கூத்தாடுவாள் என்பதனை அறைதலும் கூடுமோ?

இவ்வாறு அறநெறிகட்கு உட்படா செல்வமானது கருமுகிலுள் மின்னல் தோன்றி மறைவதே போன்று விரைவில் அழிந்தொழியும் என்பது திண்ணம்.

அளவற்ற செல்வத்தை சேர்த்துவைத்து தானும் உண்ணாது சுற்றத்தவருக்கும் இன்னலுற்ற ஞான்று அளியாது நற்காரியத்தில் உபயோகப்படுத்தாது காண்போர் இகழும் வண்ணம் வாழ்ந்திருப்பானாகில் கடைசிக்காலத்தில் இவனது செல்வத்தின் பெருமை எவ்வாறாம்?

"உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட!
உய்த்தீட்டுந் தேனீக் கரி."

தேனீயானது எவ்வாறு தான் கஷ்டப்பட்டு உண்ணாமல் சேர்த்து வைத்த தேனை வேடுவர்கள் கண்டு அழித்து விடுகிறார்களோ அஃதேபோன்று ஈயாதார் செல்வத்தினை தீயார்கொண்டு செல்வர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி என விளங்குகின்றதாகலின் நமது வாழ்நாட் குறைவினை எண்ணி நம் நல்வினைப்பயனால் அடைந்தசெல்வத்தினை தூயநெறிகளில் உபயோகித்து எல்லாம்வல்ல இறைவன் திருவடியடைய நம் எல்லோருக்கும் விடாமுயற்சியைத் தந்தருள்வானாக.



# ஆபுத்திரன் வரலாறு

(பே. ராமாநுஜம்.)

## 2. ஆபுத்திரன்.

வயனங்கோடு என்பது பாண்டிய நாட்டில் உள்ள ஓர் சிற்றூர். அதில் வசிப்பவரிற் பெரும்பான்மையினர் பார்ப்பனர்கள். இளம் பூதி யென்பவர் அச்சிற்றூரில் வாழும் ஓர் பார்ப்பனர். தான் பிறந்த குலத்திற்கு ஏற்ப ஒழுக்கமும் இரக்கம் உள்ள நெஞ்சும் உடையவர். எனினும் புத்திரப் பேறு இல்லாதவர். இக் குறையால் வேதம் ஓதித் தெளிந்த விப்பிரராகிய இளம் பூதியும் அவர் மனைவியும் மனம் வருந்தி, இறைவன் திருவருளை வேண்டி எத்தனையோ கோவில்களை வலம் வந்தனர். எத்தனையோ புண்ணிய துறைகளிற் சென்று நீராடினர். ஆயினும் அவர் நினைத்த பயன் பெற்றனரில்லை. ஒருநாள் அவரும் அவர் மனைவியும் தமது உறவினர் ஒருவரின் ஊருக்குச் சென்று, திரும்பி வந்து கொண்டிருந்தனர். அவ் விருவரையுந்தான், அப் பசு நெடுந் தூரத்தே கண்டது. அவர்கள் தனது அருகில் வந்ததும், அவர்கள் முகத்தைப் பார்த்து இரக்கமான குரலில் "அம்மா" என்று கூப்பிட்டது. அத் தம்பதிகள் இருவரும் ஒரு பசு இங்ஙனம் தங்களைப் பார்த்து அழைப்பதை யறிந்து வியப்புற்று நின்றனர். ஆனால் அப் பசு அங்கு நிற்காமல் அவர்களைப் பார்த்து "அம்மா, அம்மா" என்று கூப்பிட்டுக் கொண்டே தான் வந்த வழியே மீண்டும் அத் தோப்பை நோக்கிச் செல்ல முயன்றது. அவ் விலங்கின் குறிப்பைப் பகுத்தறிவு பெற்ற அவர்கள் அறிந்து கொள்ள முடியாது சிறிது திகைப்புற்றுப் பின்னர் தம் ஊரை நோக்கிச் செல்லத் தொடங்கினர். உடனே பசு அவர்கள் அருகில் விரைவில் வந்து, அவர்களை அண்ணாந்து பார்த்துக் கதறிற்று. "ஐயோ, இப் பசுவுக்கு என்ன நேர்ந்தது? நம்மை என்ன செய்யச் சொல்லுகிறது? ஒன்றும் புலனாக வில்லையே" என்று அதன் இரக்கமான நிலையைப் பார்த்து வயிறு பிசைந்து நின்றனர். அவர்கள் மேலே செல்லாது நின்றதும் பசு மீண்டும் தோப்பை நோக்கிச் சிறிது தூரம் சென்று, அவர்களைப் பார்த்துக் கூப்பிட்டது. அவ் விருவரும் "நாம் என்றும் காணாத புதுமை இது!" என்று தம்முள் பேசிக் கொண்டு அப் பசு நின்ற இடத்தை யடைந்தனர். அவ்வளவில் அப் பசு இன்னும் சிறிது தூரம் சென்று இவர்களைப் பார்த்து நின்றது. அவர்கள் பசுவின் குறிப்பை யறிந்து அதன் பின் தொடர்ந்து சென்றனர். பசு தோப்பை யடைந்து அங்குள்ள அப் புதரின் வாயிலருகில் நின்றது. "நம்மை ஏய்த்துக் கொன்று உண்ணுவதற்காகப் பேயோ பூதமோ இங்ஙனம் பசுத்தோல் போர்த்து வந்தது போலும்!" என்று எண்ணி அவ் விருவரும் அஞ்சிய நெஞ்சினராய் உடல் விதிர்ப்புற நின்றனர். அவர்கள் அசைவற்று நிற்பதை யறிந்து பசு புதரை நோக்கிக் கதறிற்று. அவ்வளவில் அவ் விரக்கமான குரல்—முன்பு இப் பசுவின் மெல்லிய நெஞ்சை இளக்குவித்த தாழ்ந்த அழுகைக் குரல் புதருள் நின்று எழுவதைச் செவியுற்றனர் இளம்பூதியும் அவர் மனைவியும். "புலி

யைப் பொறியாற் பிடித்துக் கொல்வது போல நம்மை இப் புதருள் நுழைவித்துக் கொல்ல விரும்புகின்றதோ இம் மாயப் பசு!" என ஐயுற்றனராயினும், இளம்பூதி யென்னும் அவ் வந்தணர் "விளைவது விளைக" என ஒருவாறு மனத்துணிவு கொண்டு, தன் மனைவியைப் பார்த்து "நங்காய், நன்றே வரினும் வருக, அன்றித் தீதே விளையினும் விளைக; எங்கும் நிறைந்து ஒளிரும் இறைவன் இங்கு நம்மைக் காவாது விடான்; ஆதலின் நீ அச்சமற்றிரு; நான் உள் நுழைந்து பார்த்து வருகிறேன்" என தன் மனைவியைத் தேற்றி, பசுவைப் பின்புறம் திரும்பிப் பார்த்த வண்ணமே புதருள் நுழைந்தார். அங்கே பொற்சிலை போன்ற அந்த இளமகவைக் கண்ணுற்றதும் அவர் தன்னையும் மறந்தார்; அப் பசுவையும் மறந்தார். அம் மகவைத் தன் இரு கையாலும் எடுத்துக் களிப்பு மிகுதியால் "நம்பி பிறந்தான், நம் சுற்றம் தழைக" என்று பெருங் குரலாற் கூவினர். அம் மகிழ்ச்சிப் பேரொலியைக் கேட்ட அவர் மனைவி இன்ன தென்று அறியாது, பசுவையும் மதியாது புதருள் விரைந்து நுழைந்தாள். அங்கே ஓர் அழகிய ஆண் மகவு தன் கணவன் கையில் இருக்கக் கண்டாள். கண்டதும் பெருமகிழ்வோடு "இவன் ஆ மகனல்லன், என் மகனே" என்று கூறித் தனது கொழுநனிடத்திருந்த குழந்தையை வாங்கித் தன் மார்பில் அணைத்துக் கொண்டாள். இப் பெரு மகிழ்ச்சியினிடையே அத் தெய்வப் பசு தன் இளங்கன்றை நினைந்து சென்று விட்டது. கரையற்ற மகிழ்ச்சிப் பெருக்கில் மூழ்கிய அத் தம்பதிகள் தமக்கு இவ் வரும் பேறு அளித்த அவ் வருமைப் பசுவைப் போற்றி வணங்கல் வேண்டுமெனப் புதரினின்றும் வெளிவந்து பார்த்தனர். அப் பசு அங்கு இல்லாததைக் கண்டு நெஞ்சு திடுக்கிட்டனர் "அந்தோ! என்ன தவறு புரிந்து விட்டோம்? நம் பெருமான் தான் இங்ஙனம் பசு வேடங் கொண்டு நம்மை ஆண்டருளினன் போலும்! அப் பரம கருணாகரனது மெய்த்திருவுருவை நம் புல்லிய கண்களாரக் கண்டு களிக்கப் பெற்றோமில்லையே?" என்று பிராமணரும் அவர் மனைவியும் மனம் பதறினர்.

"ஒன்றாகி மூலத் தருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி வழி
சென்று சறுங்காலத் தந்நிலையதாகி
சிறந்துலகந் தானாகிச் செஞ்சவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே! எங்கள்
நவைதீர்க்கும் நாயகமே! நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி அயற்பேரைக் காய்தி
நிலையில்லாத் தீவினையும் நீதந்த தன்றே."

"தாய்தன்னை யறியாத கன்றில்லை தன்கன்றை
ஆய் அறியும் அதுபோல உலகின்தாய் ஆகின், ஐய!
நீயறிதி எப்பொருளும் அவை உன்னை நிலையறியா
மாயை இது என் கொலோ? வாராதே வரவல்லாய்!"

"நீ ஆதிபரம்பரமும் நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும் நின் அடியவே அயலில்லை
நீயாரின் ஒளித்தியால், வெளி நின்றால் தீங்குண்டோ?
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ?"

என்று ஆடிப்பாடி மகிழ்ந்தனர் இளம்பூதியந்தணர். அவர் மனைவி இறைவன் திருவருட் செயலை நினைந்து நினைந்து நெஞ்சுருகிக் கண்ணீர் உகுத்து நின்றாள். பின்னர் இருவரும் களிப்பு மிக்க உள்ளத்தராய் இறைவன் திருவருளைப் புகழ்ந்து பேசிக் கொண்டே தமது ஊர் சென்று இல்லம் அடைந்தனர். அவ் வூரா ரனைவரும் இவர்கள் அடைந்த இப் பெறற்கரும் பேற்றையறிந்து, அவர்களுடைய நல்வினையைப் புகழ்ந்து பேசிக் கொண்டாடினர். பின்பு ஒரு நல்ல நாளில் தம் மகனுக்குப் பெயர்சூட்ட விரும்பித் தம் உறவினர் பலரையும் அழைத்தனர் இளம்பூதியும் அவர் மனைவியும். இறைவன் ஆ உருவோடு வந்து இப் புத்திரனை யளித்தமையால் இச் செல்வனை 'ஆபுத்திரன்' என்ற திருப்பெயரால் அழைத்தலே தக்கதெனக் கருதி அப்பெயரைச் சூட்டி, விருந்து செய்து விழாக் கொண்டாடினர்.

## 3. மாதும் வேதியனும்.

வயனங்கோடு என்னும் அச்சிற்றூர்க்குத் தென்திசையில் ஒரு மங்கை நல்லாள் வந்து கொண்டிருந்தாள். பொன்னைப் போன்ற நிறமும் மின்னைப் போன்ற இடையும் உடையவள். ஆற்றிலே நீர் அறுத்துச் சென்றதால் உண்டான கருமணல் ஒழுங்கு போன்ற நீண்டு செறிந்து கரிய கூந்தலை யுடையவள். அவள் முழுமதியன்ன திருமுக மண்டிலம் பொலிவிழந் திருந்தது. வேலை செய்து தடித்துப் போகாமல் அவள் கரங்கள் பூவினும் மென்மையவா யிருந்தன. பஞ்சினும் மெல்லிய அவள் சிற்றடிகள் பருக்கைக் கற்கள் நிறைந்த அச் சிறு வழியில் நடக்கக் கூசின. அவைகள் செந்நிறம் பெற்றுத் திகழ்ந்தமையால் இக்கொடிய வழியில் அவள் நெடுந்தூரம் நடந்து வந்திருத்தல் வேண்டும். அவளது உடையும் பிறவும் அவள் உயர்ந்த நிலையில் வாழ்ந்தவள் என்பதை வெளியிட்டன. இத்தகைய அம்மாது இக் கொடு வழியில் நெடுந்தூரம் தனிமையாக நடந்துவர நேரிட்ட நிலைமை மிகவும் இரங்கத்தக்கது. அந்தோ! உலகில் பொருளைக் கவரும் கள்வரினும், அழகை நுகர்தற்கு விரும்பும் சோரர் மிகப் பலரன்றோ? இஃது அறிந்திருந்தும் அவள் தனித்து வருவதற்கு நேர்ந்த காரணம் யாதோ? அவள் கணவன் கடிந்தமையோ, மாமியின் வஞ்சனையோ? அவளது இன்னலுக்கு உற்ற காரணம் இன்னதென்று துணிந்து கூறுவதற்கு இல்லை. இங்ஙனம் அவள் அத்தனிவழியே வந்துகொண் டிருக்கையில் அந்தணர் ஒருவர் அவளைச் சந்தித்தார். "அம்மா, நீயார்? பிராமண குலப் பெண்போலக் காணப்படுகின்றனையே. மங்கைப் பருவமுடைய உனது கண்கள் மூப்படைந்தவர்களது கண்களைப்போல குழி விழுந்திருக்கின்றன; முகமோ பொலி விழந்து வாட்ட முற்றிருக்கின்றது. கருத்துச் செழித்த கூந்தல் கற்றை கற்றையாகச் சடைபிடித்து இருக்கின்றது. ஐயோ! உணவு கண்டு, பல நாட்களாயின போல உன் நிலை தோன்றுகிறதே! நீ இந்தக் காட்டில் தனியே வரலாமா?" என்று அப்பெண்ணைப் பார்த்து மனம் உருகிக் கேட்டார். அதற்கு அவள், "ஐய, யான் ஓர் கொடும்பாவி; நான் புரிந்த

தீவினைக்குத் தக்க தண்டம் அநுபவிக்கிறேன். ஈசா! அடியேன் செய்த தீவினையை மன்னித்து அருளுவையா?" என்று கூறிக் கண்ணீர் உதிர்த்தாள்.

"மகளே, மனம் வருந்த வேண்டாம்; உலகில் தீவினை புரியாதவர் யாவர்? நம்மை யெல்லாம் ஆட்கொண்டருளும் பரம்பொருளே குற்றமற்ற பொருள்; நாம் அனைவரும் குற்றம் புரியக் கூடியவர்களே; குற்றம் புரியாதவர்கள் தாம் இறைவன் திருவருளுக்குச் சொந்த மாவார்கள் என்றால் உலகிற் பெரும்பாலானவர்கள் அவன், அருளுக்கு விலக்கானவர்களே யாவர். 'குற்றம் பார்க்கில் சுற்றமில்லை' என்பது நம் போன்றவர்க்கு ஏற்பட்டதாயினும், ஆண்டவன் தனது கருணைப் பெருக்கால் அனைவரையும் அவர்கள் செய்த குற்றத்தை மன்னித்தும் பாதுகாப்பான். உலகில் நிகழ்வன அனைத்தும் இறைவன் நியமனத்தால் நடப்பனவேயாகும். ஒருவனைத் தீவினையாளன் என்றால் அத் தீவினை ஆண்டவன் தந்ததே யல்லவா? ஆதலின் அவன் அனைவரையும் காவாது விடான். மிகக் கொடியவர்களாகிய இரணியனையும் இராவணனையும் அல்லவா தனது கருணைப் பெருக்கால் மேலுலகில் நல்வாழ்வு பெறச் செய்தான்? ஆகையால் நீ மனம் வருந்தி உடல் மெலிதல் வேண்டாம். நீ யார் என்பதை எனக்கு அறியாவிடினும், உனக்கு நேர்ந்த துன்பம் இன்னது என்பதையாவது என்னிடம் கூற இசைவாயா?"

"எவ்வாறு சொல்வேன்? ஐயோ! அந்தப் பெருங்கடலில்—அகன்று பரந்து கண்ணிற்கு எட்டியவரை ஒரே நீல நிறமாகக் காட்சி தந்த அவ்வாழ் கடலில் வீழ்ந்து எனது புல்லிய உயிரை மாய்த்துக் கொள்ளாது நாணமின்றி இன்னும் உயிர் தரித்து இருக்கின்றேனே! நினைக்கும் பொழுதே உள்ளம் பதறுகிறது. உடல் நடுங்குகிறது. தென்கடல் துறையிலே, அக் குமரி முனைக் கரையிலே பாவி நெஞ்சம் பட்ட துயரை எவ்வாறு கூறுவேன்? அன்பு மிக்க பெரியவரே, கடலைப்பற்றிக் கேள்வி யன்றி, கண்ணால் கண்டிராத யான் இன்றைக்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் தென்கடல் துறை சேர்ந்தேன். பரந்து அகன்ற நீர் நிலையைக் கண்டேன். அப்பெருங் கடற்கரையிலே நான் ஒருத்தியே தனித்திருந்தேன். அக்கடலின் காட்சி அடிச்சிக்கு அச்சம் ஊட்டுவதா யிருந்தது. 'ஆண்டவனே, நான் பேதை; மதியற்ற தன்மையால் தவறு செய்துவிட்டேன். அதனால் இதுவரை ஏழை அநுபவித்த துயர்போதும்; பாவியை ஆட்கொண்டருள்' என்று கூறிக் கடல் நீரில் முழுகப்போனேன். ஐயோ! என்ன சொல்லட்டும்! 'சீ பாவி, இப்புனித நீரில் உன் அழுக்கு உடலை நனையாதே' என்று கூறுவதுபோல் அலைகள் பேரிரைச்சலோடு வந்து எளியளைக் கரைமருங்கிலே தள்ளிற்று. 'இறைவனே! கல்லுக்கும் உயிர்தந்த கருணாகரன் அல்லவா நீ? ஏழை செய்த பிழையை மன்னித்து ஆட்கொண்டருள்' என்று கடவுளை வேண்டி, அலை ஓய்ந்த பின்னர் முழுகலாமென்று காலையிற் சென்றவள் மாலைவரை காத்திருந்தேன். நாழிக்கு நாழிகை கடல் கொந்தளிப்பு அதிகமாயிற்று. எனக்கு அச்சம் மிகுந்தது. 'சரி, இனி இப்பூவுலகில் பாவியேன வாழ்தல் இறைவனுக்கு விருப்பமில்லைபோலும்' என்று கருதி 'வரும் பிறவியிலாவது அடிச்சிக்கு நல்லறிவு தந்தருள்' என்று கூறிக் கடலில் விழப்போனேன். பேரிரைச்சலோடு ஒன்றன்பின் ஒன்றாக மலையடுக்குகள்போல விரைந்துவந்த பேரலைகள் என்னை ஒரே படியாகத் தூக்கிக் கரையில் வீசியெறிந்தது. 'ஏ பாவி, கொலைகாரி! உன் கொலைப் பாதகத்தை என்னிடம் வந்தா தீர்க்க முயல்கிறாய்?' என்று அதட்டு

வதுபோல் இருந்தது அக்கடல் முழக்கம்! பழைய செயல்கள் அனைத்தும் என் மனக்கண்ணில் தோன்றின. 'பெருங்கடலே! நான் கொலைகாரிதான்! சிசுக் கொலை செய்தவள் அல்லவா நான்! என்னை நீ மன்னிக்கமாட்டாய்' என்று கூறி மூர்ச்சையானேன். பின்பு நெடுநேரங் கழித்துக் கண்விழித்தேன். எங்கும் திணிந்த காரிருள்! 'ஜோ' என்ற கடல் ஒலிமட்டும் நிற்கவில்லை. எனக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. ஐயோ! அந்தச் சிறுமகவு—பொற் பதுமை போன்ற களங்கமற்ற நெஞ்சுடைய அவ்வாண்மகவு........எனக்கும் நற்கதியுண்டா?'' என்று மேல் ஒன்றும் கூற முடியாதவளாய்ச் சோர்ந்து வீழ்ந்தாள்.

"இதென்ன, 'கிணறுவெட்ட பூதம் புறப்பட்ட கதைபோல்' தனித்து வருந்திவந்த இவள் நிலையை அறிய முயல, அதற்குள் இவள் இங்கேயே உயிரை விட்டுவிடுவாள்போலத் தோன்றுகிறதே'' என் அவர் விலவிலத்து, அருகில் உள்ள நீர் நிலையிற் சென்று நீர் சிறிது கொணர்ந்து அவள் சோர்வை நீக்கினார். அம்மங்கை நல்லாள் சோர்வுதீர்ந்து எழுந்து நின்றாள். "அம்மா, நீ ஒன்றும் பேசவேண்டாம். எனது வீட்டிற்குவந்து உணவு அருந்திக் களை தீர்ந்து போகலாம் வருகிறாயா?'' என்றார் பெரியவர்.

"ஐயா, உங்கள் போன்பிற்கு நான் பாத்திரமாகியது பெரும்பாக்கியமே. எனினும், பாவிநான் உங்கள் புனித இடத்தில் கால்வைத்தல் தகாது; ஆனால் தீவினை புரிந்த எனக்கு நற்புத்தி கிட்டுமா? இதைமட்டும் கூறுங்கள்.''

"தீவினை தீவினையென்று பேசவேண்டாம்; ஆனால், என்னவோ ஆண் மகவு என்று கூறினாயே, அதன் விவரம் என்ன?''

"ஐயோ, அதுதான் நான்செய்த கொடுமை! எங்ஙனம் உய்வேன்? எவ்வாறு சொல்வேன்?'' என்று மீண்டும் அழுதாள்.

"சொல்லவேண்டாம், சொல்லவேண்டாம்'' என்றார் அவ்வந்தணர்.

"தந்தை போன்றவரே, தங்களிடத்து உற்றது கூறவில் குற்றமில்லை. வடக்கே வாரணசியென்னும் ஊரில் வேதம் அறிந்த வித்தகராகிய ஆரண உவாத்தி அபஞ்சிகன் மாசற்ற புகழுக்கு மறுவுண்டாகப் பிறந்த பாவியேன் மனையாள் ஆனேன். எனது கணவரின் குறிப்பறிந்து, அவர் குணத்திற்கு இயைய நடந்துவந்தேன். அவருடைய ஒப்பற்ற அன்பிற்கும் உரியவளானேன். இங்ஙனம் சில வருடம் மனைவாழ்க்கை நடத்தி வருகையில், பேதை மதியுடையேன் ஒரு பெருந்தவறு புரிந்துவிட்டேன். எனது ஆருயிர்க் காதலர்க்கு அன்புகனிந்தவடிவினர்க்கு உரிய எனது உடலை மாசு படுத்திக் கொண்டேன். ஐயோ! அந்தப் பாவி—பழியஞ்சா நெஞ்சன் என்னை வலிந்து கெடுத்துவிட்டான். என் செய்வேன் ஏழை? கண்ணீரும் கம்பலையுமாய்க் கணவரிடம் முறையிட்டேன். அவரோ உடல் விதிர் விதிர்த்தார். 'எனது குலப்பெருமை இன்றோடு கெட்டதே' என்று பெருமூச் செறிந்தார். இங்கும் அங்குமாக வெறி கொண்டவர்போல் அலைந்தார். இறுதியாகத் தனக்கு உரிய நண்பர்கள் சிலரிடம் முறையிட்டார். அவர்கள் அப்பழிகாரனைத் தண்டிக்க வேண்டுமென ஆர்ப்பரித்தனர். 'வேண்டாம், வேண்டாம்; யான் புரிந்த தீவினையே இவ்வாறு விளைந்துளது; ஆதலின் தண்டனைக்கு உரியவன்

யானே' என்றார் எனது கணவர். மனம் நடுங்க மறைவிடத்தே நின்று கேட்டுக்கொண்டிருந்த எனக்கு எவ்வாறிருக்கும்? எனது உயிர் தத்தளித்தது; கண்கள் பஞ்சடைந்தன; நா உலர்ந்து விட்டது. ஒன்றும் அறியாதவளாகி அவர்கள் முன்னிலையில் ஓடி 'ஐயோ! எனது கொழுநருக்கு ஒன்றும் நேராதவாறு காப்பாற்றுங்கள். இனி யான் உயிரோடு இருக்குமட்டும் எனது தலைவருக்கு நேர்ந்த இப்பழிச்சொல் மாறாது. ஆதலின், எனது உயிரை மாய்த்துக் கொள்கிறேன்'' என்று ஒரே பிடிவாதமாகக் கூறினேன். அதற்கு அவர்கள் 'தற்கொலையா? அது மிகக் கொடுமையாயிற்றே; வேண்டாம்' என்று எவ்வளவோ ஆறுதல் மொழிகள் எனக்கும் எனது கணவருக்கும் கூறினர். மேலும் 'இப்பழியும் பாவமும் நீங்க ஒரு வழியுளது; அது தொன்று தொட்டு இன்றுவரை நடந்து வருகிறது; உடல் மாசுபட்ட சாலிமட்டும் கன்னியாகுமரி சென்று நீராடி இறைவனைத் தொழுது வரவேண்டும்' என்று அமைதியுடன் கூறினர். இதனாலாவது எனது தலைவர் மன அமைதியோடு இருக்கலாமல்லவா? அது கருதி எனக்குப் பெருமகிழ்வு பிறந்தது. ஆனால் எனது கணவர் மனம் தடுமாறினார். மற்றவர்களின் அறவுரையும், என்னுடைய இழிநிலையும் ஒன்றுசேர்ந்து அவர் மனதை ஆற்றுவிக்க, அதனால் ஒருவாறு துணிவு கொண்டு என்னைப் பிரிய மனம் இசைந்தார். எனக்கு நேர்ந்த இழிதகைமையால் முதலில் எனது ஊரைவிட்டுச் செல்லும்வரை எளியேற்கு எவ்வகைத் துயரும் அச்சமும் தோன்றவில்லை. பின்பு எனது மனதில் உதித்த எண்ணங்கள் அளவிறந்தனவாகும். 'மீண்டும் எனது ஆருயிர்க் கணவரைக் கண்டு மகிழும் பேறு பெறுவேனா? முன்புபோலவே என்மீது களையற்ற அன்பு காட்டி மகிழ்வரோ? எனது தலைவர் வாழும் அவ்வூரை—வாரணாசி யென்னும் அப்புனித இடத்தை மீண்டும் அடையப்பெறுவேனா? அந்த ஊர் இறைவன் வாழும் மேல் உலகத்தினும் சிறப்புடையதாகும்' என்று பலவாறு எண்ணமிட்டுக்கொண்டே, அங்குத் தங்கிவருகையில் கொற்கை நகருக்குத் தெற்கே இடையர் சேரிக்கு அருகில் வரும்பொழுது எளியேற்கு அயர்வு தோன்றியது. வயிற்றில் ஒருவகை நோவு மிகுந்தது. மேல் நடக்க இயலாதவளானேன். மிக்க துன்பத்தோடு ஓர் சோலையை அடைந்து, அதன் ஓர் பக்கத்தில் இருந்த புதர் மறைவை அடைந்தேன். சிறிது பொழுதில் எனக்கு ஒருவகை மயக்கம் உண்டாயிற்று. கண்கள் சோர்வடைந்தன. நா வரட்சியுற்றது. தலையில் ஒரு பெரிய சுமையை வைத்திருப்பதுபோலத் தோன்றியது. உலகமே துன்பமயமாக காணப்பட்டது. அறிவு முழுவதும் இழந்தேன். இவ்வாறு எவ்வளவு பொழுதுவரை இருந்தேன் என்பது அறியேன். யான் எனது அறிவுவரப் பெற்றுக் கண்விழித்துப் பார்க்கையில், ஓர் ஆண் சிசு என்து பக்கத்தில் தரையில் கிடந்து கதறிக்கொண் டிருந்ததைக் கண்டேன். உடனே அம்மகவை யெடுத்து உச்சி மோந்து பால்தந்து பசும்புல் தரையில் கிடத்தினேன். ஐயோ! அப்பெறற்கரும் பேற்றை—விலையற்ற மணியை-உயிரினும் சிறந்த அவ்வாண்மகவை அங்கேயே விட்டுவிட்டுப் பாவியேன் குமரியாடச் சென்றேன். ஒரு பகலும் நிறையாத அச்சிசுவைத் தனியே, நரி முதலிய தீய விலங்குகள் ஊடாடித் திரியும் அச்சோலைப் புதருள் விடுத்துச் சென்ற இரக்கமில்லாத தீவினையேற்கும் நற்கதியுண்டா? எனக்கு எக்கதி வாய்ப்பினும் வாய்க்கட்டும். அது குறித்து ஏழையேன் வருந்தவில்லை. ஐயோ! அந்தத் தங்கப் பதுமை எவ்வாறாயிற்றோ?'' என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதாள்.

மனதை உருக்கும் இவ்வரலாற்றை மெய்மறந்து கேட்டுக்கொண்டிருந்த அவ்வந்தணர், "அழாதே! அழாதே! உனக்கு ஓர் நற்செய்தி கூறப்போகின்றேன். நீ அச்சிசுவை எங்கே விட்டுச் சென்றாய்?" என்று வினவினர்.

"இடையர் சேரிக்கு அருகேயுள்ள ஓர் சோலைப் புதரில்" என்று தேம்பியவண்ணமே கூறினள்.

"அம்மா, அழாதே! உன் மகவுக்கு ஒரு தீங்கும் நேரவில்லை; உயர்ந்த இடத்தில் செவ்விய முறையில் வளர்க்கப்பட்டு வருகிறது. நீ எனது வீட்டிற்கு வந்து சோர்வு தீர்ந்தபின் போகலாம் வா."

"என் மகவு உயிரோடு இருக்கிறதா? யார் எடுத்து வளர்க்கின்றனர்?"

"அது பற்றி நீ சிந்திக்கவேண்டாம்; நம் வகுப்பினர் ஒருவர் வீட்டில் தான் வளர்ந்து வருகிறான்."

"அங்ஙனமாயின் அறிவிலியாகிய என்னைக் குறித்து நீங்கள் கவலையுற வேண்டாம். எனது கணவரைக் கண்டு, அவரது அன்பைப் பெறாதவரை எளியேன் மனம் அமைதியுறாது. ஏழைக்கு விடை கொடுங்கள். தந்தையே, தங்கள் பேரன்பிற்கு வணக்கம். இறைவனே, அம்மகவுக்கு நீண்ட ஆயுளும் அறிவும் தந்து காப்பாற்றவேண்டுகிறேன்" என்று கடவுளை வணங்கி, அப்பெரியவரிடம் விடைபெற்றுத் தளர்ந்த நடையுடன் சென்றாள். சென்றவள் மகவையீன்ற சோலையருகிற் சென்றதும், மீண்டும் தன் மகவு நினைவு வரப்பெற்று 'கோ' என்று கதறியழுதாள். அந்தோ! பாவம்! அவளை அங்கு ஆற்றுவார் யார்? தேற்றுவார் யார்? தானே நெடுநேரம் தனித்து அழுத பின்னர் ஒருவாறு மனந்தேறி, பொருநை யாற்றின் கால்வாயை அடைந்து, அதிற் குளித்துக் களை தீர்ந்து மேலே நடக்கத் தொடங்கினள்.

---

# உள்ளத்தினின்றும் கிளர்ந்தெழுந்த வீரம்.

—(0)—

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

பாட்டு! ஆ! அதனை எண்ணும்போதே உள்ளம் துள்ளி எழுகிறது! அதனை ஓதுங்கால் உள்ளத்தில் உரைப்பரும் உவகை பொங்குகிறது! கருத்தில் எழும் கவலைகளனைத்தும் கடிதில் மறைகின்றன! சோர்வு மிகுந்து வாடி வருந்தும் உள்ளத்திலுங்கூட, சீரிய பாட்டு புத்துணர்ச்சியை எழுப்பி விடுகின்றது! இயற்கையின்பமும் இறைவனுண்மையும் நாட்டுப் பற்றும் மிருகசக்திக்கு அஞ்சாமையும் மொழி வளர்ச்சியில் தணியாக் காதலும் அடிமை வாழ்வில் வெறுப்பும் உரிமை வாழ்வில் விருப்பும் ஒருங்கு கலந்து ஒரு கவிஞன் உள்ளத்தில் ஊறவும், எதிர்ப்படுந் தடைகள் அனைத்தையும் கடந்து வெளிப்பட்டு ஓடிவரும் இனிய அருவியை ஒத்துப் பெருகி வருவது நாட்டுப்பாட்டு! உரிமையின்பத்தில் ஆவல் மிக்க பாவலன் ஒருவன், தனது அக உணர்ச்சிகளை விளக்கி ஓதுவோர் உள்ளத்தில் நன்கு பதியும் வண்ணம் சிறந்த பொருள்களை 'சொற்சித்திரங்க'ளால் திறம்படச் சித்தரித்துக் காட்டுவது நாட்டுப் பாட்டு! அடிமை வாழ்வில் வெறுப்பூட்டி உரிமையின்பத்தை விளக்கிக் காட்டி அகச்சோர்வை ஓட்டி பணிசெய்து கிடப்பதில் ஆர்வம் ஊட்டுவது நாட்டுப் பாட்டு! மூடப் பழக்க வழக்கங்களையும் சாதிப் பிணக்குகளையும் கட்சிச் சண்டைகளையும் ஒழித்து எங்கணும் சமரசத்தை காட்டுவது நாட்டுப் பாட்டு! பண்ணின்பம் செறிந்தது பாட்டு! ஓசையின்பம் நிறைந்தது பாட்டு! இன்னருள் வடிவினனாகிய இறைவன், கவிஞனை ஒரு கருவியாக மட்டுமே கொண்டு, அவன் வாயிலாக நாட்டினரை உய்விக்கப் பாடுவிப்பனவே நாட்டுப் பாட்டுகள்!!

பெயரைக் கூறும்பொழுதே செவிகளில் இன்பத் தேனைப் பாய்விக்கும் நமது செந்தமிழ்த் திருநாடு, பாட்டுகளுக்குப் பெயர்பெற்ற தென்பது பாவின்பம் நுகரும் பலரும் அறிந்ததே. இப்பொழுது நமக்குக் கிடைக்கும் தமிழ் நூல்களுள், தொன்மையில் முதன்மை பெற்ற தொல்காப்பியம் முதல் தேவார—திவ்ய ப்ரபந்தங்கள் வரையில், இந்நாட்டு மக்கள் மக்கள் நலத்தைத் தம் நலமாகக் கருதும் அறம் திறம்பாத அருள் மன்னரின் செங்கோலாட்சியின் கீழ் உரிமையின்பம் நுகர்ந்துகொண்டிருந்த காலத்தில் பாடப்பெற்ற பாக்களாகும். சுமார் இரண்டு நூற்றாண்டுகளாக இச் செந்தமிழ்நாட்டு மக்கள் உரிமை வாழ்வை இழந்து அடிமை வாழ்வை அடைந்து வயிற்றை வளர்க்க உழைப்பதிலேயே கவலை மிகுந்து பலவகைத் துன்பங்களுக்கும் ஆளாயினர். அத்தகையோர், பாட்டுகளில் போதிய கவனம் செலுத்தா தொழிந்தது வியப்

பன்று. சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன்பு இந்நாட்டிலிருந்த வெண்பாப் புலிகளும் சந்தச் சரபங்களும், கேட்பவர்களுக்குப் பொருள் விளங்கா விடினும் எவரும் பிரமிக்குமாறு தமது புலமைத்திறமையை வெளிப்படுத்திவிட வேண்டுமென்னும் ஆர்வம் மிகுந்தவர்களாய் பாடி வைத்துப் போயிருக்கும் 'இயமகம்' 'ஏகபாதம்' 'சதுரங்கம்' 'மாலை மாற்று' முதலிய சித்திரக் கவிகளைச் சிந்திக்கும்போது சிரிப்பே பெருகுகிறது. அக்கவிஞரது உள்ளத்தில் உரிமை வேட்கை எழாதொழிந்தது தமிழர் செய்த தவக்குறையே யாம்.

அதன் பின்னர், தமிழர் செய்த அருந்தவப்பயனாக இந்நாட்டில் தோன்றிய இளங்கதிரோ, காலஞ்சென்ற தேசீயக் கவியரசர் திரு-சி-சுப்பிரமணிய பாரதியார். அக்கவியரசர், வடநாட்டில் பிரசித்தி பெற்றிலங்கும் இரவீந்திரரை யொத்து, இந்நாட்டில் சிறந்து விளங்கிய தென்னாட்டுக் கவீந்திரராவர். அக்கவியரசரது உணர்ச்சி நிறைந்த உயரிய பாக்கள், தற்காலத் தமிழ் இளைஞர்களின் நாவில் நடமிடுகின்றன. தற்காலத் தமிழ்ப் பண்டிதர்களைப்போல் அவரும் உயிர்க்கு உறுதி பயக்கும் உயரிய நூல்கள் பலவற்றையும் கற்றுணர்ந்தவரே யெனினும், அதன் பயனாக தாம் பெற்ற வித்யா—ஞானத்தை விளம்பரப் படுத்திக்கொள்ள விரும்பினாரில்லை. அடிமை வாழ்வில் கிடந்து உழலும் தற்காலத் தமிழர்களது நிலையை உன்னி உன்னி, அவரது உள்ளம் பெரிதும் உருகலாயிற்று. அவர், தமிழ்த்தாயின் தற்கால நிலையை எண்ணி எண்ணிக் கண்ணீர் உதிர்த்தார். நவீன நாகரிகத்திலே மையல் மிகுந்தவர்களாய்—தமது தாய்மொழியையும் தாய் நாட்டையும் கவனியாதவர்களாய்—கேவலம் உண்டு உடுத்து உறங்குவதிலேயே பொழுது கழிக்கும் சோம்பேறிகளாய்—சாதிச் சண்டைகளையும் கட்சிப் பிணக்குகளையும் வளர்ப்பவர்களாய்—உரிமை வேட்கையின்றி அடிமைத் தொழிலிலேயே ஆர்வம் மிகுந்து அலையும் அலிகளாய்ப் பொழுது கழித்துவரும் தமது சகோதரர்கள் பக்கலில், பாரதியார் பெரிதும் இரங்கலானார். அன்பு ததும்பும் அகத்தைப்பெற்ற பாரதியார், என் செய்வார்? வீரத் தெய்வமாம் சீரிய பராசக்தியின் திருவடிகளிலே சரணம் புகுந்த அவர், அவ்வன்னையை நோக்கிப் பின்வருமாறு கேட்கலானார்:—

"நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங் கெடப் புழுதியில் எறிவதுண்டோ?
சொல்லடி சிவ சக்தி!—எனைச்
சுடர் மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்!
வல்லமை தாராயோ—இந்த
மா நிலம் பயனுற வாழ்வதற்கே?
சொல்லடி சிவ சக்தி!—நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ?"

"எண்ணுங் காரியங்கள் எல்லாம்—வெற்றி
ஏறப் புரிந்தருளல் வேண்டும்;—பல
பண்ணில் கோடிவகை இன்பம்—நான்
பாடத் திறனடைதல் வேண்டும்".

அன்பு மிகுந்து அகங் கனிந்து வேண்டும் மெய்யன்பர்க்கு, அருள் வடிவினளாகிய அன்னை அருளா தொழிவளோ? தற்காலத் தமிழரைத் தட்டி எழுப்பி—அடிமை வாழ்வில் அன்னார் கொண்ட ஆர்வத்தை அகற்றி—உரிமை வேட்கை உடையவராக்கி—"பச்சை ஊன் இயைந்த வேற் படைகள் வந்த போதினும்—உச்சிமீது வான் இடிந்து வீழுகின்ற போதினும்—அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமில்லை இல்லையே!"—என்று பாடிநிற்கச் செய்விக்கக் கூடியதொரு கவிதா சக்தியை பராசக்தி தேவியார் பாரதியார்க்கு அருள் செய்தார். அதுமுதல்; பாரதியாரது உள்ளத்தினின்றும் என்றும்—எவர்க்கும்—அஞ்சாத பெருவீரம் அடிக்கடி கிளர்ந்தெழுவதாயிற்று. அக் கிளர்ச்சியின் பயனுக அவர் பாடிய அரும்பெறற் பாக்களே, தற்காலத் தமிழ் இளைஞர்கள் பலரை பயன் கருதாப் பணி புரியும் அஹிம்சா வீரர்களாகச் செய்வித் திருக்கின்றன. "நல்லது தீயது நாம் அறியோம்; அன்னை—நல்லது நாட்டு; தீமையை ஓட்டுக"—என்பதே பாரதியாரது உள்ளக் கிடக்கை. அனைவரையும் ஆட்டி வைத்தருளும் அன்னை பராசக்தி, தன்னை ஒரு கருவியாக மட்டுமே கொண்டு இன்பம் தரும்பும் பாக்கள் பலவற்றைப் பாடுவிக்கின்றாளென்பதே பாரதியாரது திருவுள்ளம். இவ்வுண்மை,

"மா காளி பராசக்தி உமையாள் அன்னை
வைரவி கங்காளி மனோன்மணி மா மாயி—
பாகார்ந்த தே மொழியாள் படருஞ் செந்தீ
பாய்ந்திடு மோர் விழியுடையாள் பரம சக்தி—
ஆகாரம் அளித்திடுவாள் அறிவு தந்தாள்
ஆதி பராசக்தி எனது அமிர்தப் பொய்கை—
சோகாடவிக்குள் எனைப் புக வொட்டாமல்
தூய்ய செழுந் தேன் போல் ஓர் கவிதை சொல்வாள்"—

எனும் பாரதியார் மணிவாக்கால் செவ்விதிற் புலனுகும்.

பாரதியார் மனம், தற்காலத் தமிழர்கள் பால் சென்றது. தமிழ்மக்கள் மனம், பாட்டில் நாட்டம் கொள்ளாது நவீன நாகரிகத்தில் ஆழ்ந்து கிடப்பதைக் கண்டு, அவரது சிந்தை பெரிதும் நொந்தது. அஞ்சா நெஞ்சமுடைய இளஞ் சிங்கங்கள் எங்கணும் பரவி யிருந்தகாலம் போய், கேவலம் பதவி பட்டங்களில் பெருமையிலும் வகுப்புவாதங்களில் பெரும் பற்றும் ஒருவரை யொருவர் மோசம் செய்து பிழைக்கும் வஞ்சக எண்ணமும் உடைய நரிகள் நிரம்பிய காலமும் தமிழ் நாட்டுக்கு வந்ததேயென்று அவரது உள்ளம் பெரிதும் புண்பட்டது. தமிழர்களது முன்னோர் எத்தகையவர்க ளென்பதை அவர்களுக்கு நினைவூட்டியேனும் அவர்களது உள்ளத்தில் புத்துணர்ச்சியைப் பெருக்க எண்ணினர்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான் புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளு சிலப்பதிகாரம் என்று ஓர் மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு".

"வலிமை வலிமை என்று பாடுவோம்!—என்றும்
வாழும் சுடர்க் குலத்தை நாடுவோம்!
தமிழிற் பழமறையைப் பாடுவோம்!—என்றும்
தலைமை பெருமை புகழ் கூடுவோம்!"

அன்பையே கடவுளாகக் கொண்ட அறிஞர் வழித் தோன்றிய தமிழா! பாரதியாரது இம் மணிமொழிகள், உனது உள்ளத்தில் உனது முன்னோர் எத்தகைய கவிஞர்கள்—எத்தகைய ஞானிகள்—எத்தகைய தியாகிக ளென்பதை நினைவூட்ட வில்லையா? "அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர்; அன்புடையார், என்பும் உரியர் பிறர்க்கு"—; "நாம் ஆர்க்கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்—நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்—ஏமாப்போம் பிணி அறியோம்; பணிவோம் அல்லோம்; இன்பமே எந்நாளும் துன்பமில்லை"—எனும் மணிமொழிகள் தோன்றிய இச் செந்தமிழ்த் திருநாட்டிலே, நீயும் ஒரு தமிழனாகப் பிறந்திருத்தலின் பயன், அஞ்சாமையும் அன்பும் வாய்ந்த அருந்தொண்டனாக விருந்து நாட்டு முன்னேற்றத்திற்கேற்ற சீரிய நற்பணி செய்வதேயன்றோ! ஒப்பற்ற சிறந்த வீரர்கள் வழித் தோன்றிய உனக்கு, "சாத்திரங்கள் ஒன்றுங் காணார்—பொய்ச்—சாத்திரப் பேய்கள் சொல்லும் வார்த்தை நம்பியே—கோத்திரம் ஒன்றா யிருந்தாலும்—ஒரு கொள்கையிற் பிரிந்தவனைக் குலைத்து இகழ்வார்"— என்று பாரதியார் பாடுமாறு கட்சிச் சண்டைகளிற் காலங் கழிப்பது வெட்கமாக இல்லையா?

தருமத்தைத் தோல்வி யுறுவித்து அதருமம் வெற்றி பெறுவதுபோல் சிற்சில சமயங்களில் தோன்றுதல் கூடும். அவ்வேளைகளில், உலக இயற்கையின் இரகசியங்களை உணர்ந்த பெரியோர்கள், ஆத்திரம் கொண்டு மூர்க்க சக்தியினால் தீய முறைகளில் பகைமையை வெல்ல மனம் கொள்ள மாட்டார்கள். ஆனால், அச்சீரியோர் உள்ளத்தில் வீரம் கிளர்ந்தெழா தொழியாது. எனினும், அவ்வீரம் மூர்க்க சக்தியைப் பின்பற்றி எழும் வீரமாகவன்றி, ஆத்ம—சக்தியைப் பின்பற்றி எழும் அஹிம்சா வீரமாகச் சிறந்து விளங்கும். எத்தகைய துன்பங்களிலும் மன அமைதி குலையாது—'தருமமே இறுதியில் வெல்லும்' எனும் நம்பிக்கையில் தளர்வுறாது—பொறுத்திருப்பதே சிறந்த வீரர்களின் இலக்கணமாகும். இவ்வுண்மையை, தனது பெயரிலேயே 'வெற்றியாளன்' எனும் மாண்பு தொனிக்கும் வண்ணம் 'விஜயன்' எனும் பெயர்கொண்ட அருச்சுனன் கூற்றாக, 'பாஞ்சாலி சபத' காவியத்திலே பாரதியார் தெளிவுபெற விளக்கி யிருத்தலை, இன்றைய தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் தத்தம் அகத்தில் நன்கு பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.

"தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும்'—எனும் இயற்கை
தருமத்தை நம்மாலே உலகம் கற்கும்
வழி தேடி விதி இந்தச் செய்கை செய்தான்;
கருமத்தை மேன் மேலும் காண்போம்; இன்று
கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம் மாறும்;

தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்;
தனு உண்டு, 'காண்டீவம்'! அதன் பேர்"—என்றான்"

இந்நாளிலே, அஹிம்சா வீர மூர்த்தியாய்—உலகு முழுதும் பரவிய உயர் புகழாளராய்—பகைவரும் மெச்சும் பண்பினராய்—பாரதநாட்டின் தனிப்பெருந் தலைவராய் விளங்கும் வீரர் யார்?

" விடுதலை பெறுவீர் விரைவா நீர்—
வெற்றி கொள்ளுவீர் என்று உரைத்து எங்கும்
கெடுதலின்றி நந் தாய்த் திருநாட்டின்
கிளர்ச்சி தன்னை வளர்ச்சி செய்கின்றான்;
'சுடுதலும் குளிரும் உயிர்க்(கு) இல்லை;
சோர்வு—வீழ்ச்சிகள் தொண்டருக்(கு) இல்லை;
எடுமினோ அறப் போரினை' என்றான்
எங்கோ மேதகம் ஏந்திய காந்தி."

என்றும் பாரதியார் மகிழ்ந்து பாடகின்ற மகாத்மா காந்தியடிக ளன்றோ!

தமிழா! உனது உள்ளத்தினின்றும் கிளர்ந்தெழும் உயரிய வீரம், கேவலம் புன்மை வாய்ந்த புரட்சி வழியில் உன்னைச் செலுத்தி விடாமல்—எத்தகைய கொடிய சோதனைகளிலும் மன உறுதி குலையாது—சத்தியாக்கிரக நெறியினின்றும் வழுவாது—நாட்டு நலத்திற்கேற்ற சீரிய தொண்டாற்றுவதில் உன்னைப் பண்படுத்துவதாகுக.

" கத்தி—வில்—வாள்—கதைகள்—எறி
கற்கள் சூலாயுதங்கள்
பித்தர்கள் தங்களுக்கே—வெகு
பெட்புடை ஆயுதங்கள்;
சத்தியம் ஈகை அருள்—பக்தி
சான்ற மனப் பெரியோர்
நித்தியமான உயர்—ஆத்ம
நேர் படையே கொள்ளுவார்"—

எனும் பாரதியாரது மணிமொழிகள், உனது உள்ளத்தினின்றும் கிளர்ந்தெழும் வீரம், தூய அஹிம்சா வீரமாகவே சிறக்குமாறு செய்விப்பனவாக.

இந்நாட்டின் பிற்கால வீரர்களாக விளங்குவதற்கு உரிய தற்காலக் குழந்தைகள் வளர்க்கப்பட்டு வரும் முறையைக் கண்டு பாரதியார் பெரிதும் இரங்கி நின்றார். 'ட'கர 'ப'கரங்களி லிருந்து எழுத்துகளைக் கற்பிக்கத் தொடங்கும் விநோதமும்; முதல் வகுப்பிலேயே ஆங்கிலமொழிக்கு அடிமைப்படுத்தி, தாய்நாட்டையும் தாய் மொழியையும் பற்றிய எண்ணமே குழந்தைகளின் மனத்தில் தோன்றாதவாறு அவர்களை வளர்த்துவரும் விபரீதமும்; எதற்கெடுத்தாலும் 'பூச்சாண்டி' 'பூச்சாண்டி' என்று பயமுறுத்தி, அவர்களைப் பயங்கொள்ளிகளாக வளர்த்துவரும் இழிவும் பாரதியாரது உள்ளத்

தைப் பெரிதும் புண்படுத்துவன ஆயின. அதன்பயனாக, ஆடி ஓடி விளையாடி மழலை பொழியும் குழந்தைகளுக்கு, பாரதியார் அறிவுறுத்தும் மணிமொழிகள் மிக மிகச் சிறந்து விளங்குகின்றன:—

"துன்பம் நெருங்கி வந்த போதும்—நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா!
அன்பு மிகுந்த தெய்வம் உண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா!";

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே—அதை
தொழுது படித்திடடி பாப்பா!
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்—அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா!";

"உயிர்களிடத்தில் அன்பு வேணும்;—தெய்வம்
உண்மை என்று தான் அறிதல் வேணும்;
வயிரமுடைய நெஞ்சு வேணும்;—இது
வாழும் முறைமையடி பாப்பா!"

இம்மட்டோ! 'அறஞ்செய விரும்பு' 'ஆறுவது சினம்' 'இயல்வது கரவேல்'—என்பன பழைய ஆத்திச்சூடி வாக்கியங்கள். தேசாபிமானம் ஊறித் ததும்பும் உள்ளமுடைய பாரதியார் கண்ட நவீன ஆத்திச்சூடியிலே, அவற்றிற்குப் பதிலாகக் காட்சியளிப்பவை 'அச்சம் தவிர்'; 'ஆண்மை மறவேல்'; 'இளைத்தல் இகழ்ச்சி'—என்பன போன்ற வீரமொழிகள். குழந்தைப் பருவத்திலேயே நமது சிறுவர் சிறுமியரின் மனத்தில் இத்தகைய வீர மொழிகள் பதிய வைக்கப்படுமாயின், அவர்களது உடலோடு அறிவோடும் தேசாபிமானமும் வீரமும் சேர்ந்து வளர்ந்து வருமன்றோ! தமிழா! உறங்கியது போதும்; விழித்தெழு! உனது குழந்தைகளை பாரதியார் அறிவுறுத்திய இத்தகைய நூதன முறையில் வளர்த்து வர உறுதி செய்துகொள்! இன்றேல், தங்கள் அடிமை முறையில் வளர்த்து வந்தது குறித்து, தற்காலக் குழந்தைகள் பிற்காலத்தில் உன்னைக் கொடுமையாகச் சபிக்கும். அச்சாபத்திற்கு ஆளாகாதே!

உரிமை வாழ்வின்பத்தில் திளைத்துக் கொண்டிருந்த இத்தமிழ்நாடு, இன்று அடிமை வாழ்வை அடைந்து வருந்த நேர்ந்ததன் காரணங்களுள் முக்கியமானது, தமிழர் பெண்மக்களை அடிமைகளாகப் பாவித்து நடத்தி வந்ததேயாம். அம் மங்கைகள் சொரிந்த கண்ணீரே, உரிமை வாழ்வுக்கு வெந்நீராக இருந்து அதை ஒடுக்கி ஒழித்துவிட்டது. 'என்றேனும் ஒரு நாள் தன் கணவன் தன்னை மீட்க வாரா தொழியான்' என்னும் உறுதியான நம்பிக்கையினாலே, அசோக வனத்தில் எண்ணிறந்த துன்பங்களையும் சகித்து நின்ற சானகிப் பிராட்டியார், மாருதி வாயிலாக தன் கணவனுக்கு எத்தகைய செய்தியை அனுப்பினள்?

"ஆரம் தாழ் திருமார்பற்(கு) அமைந்த(து) ஓர்
தாரந் தான் அவளேனும், 'தயா' எனும்

ஈரந்தான் அகத்(து) இல்லை என்றாலும், தன்
வீரங் காத்தலை வேண்டு" என்று வேண்டுவாய்!"

'தனது நாயகனது வீரத்தன்மைக்கு இழுக்கு நேரப் பார்த்திருத்தல் கூடாது' என்னும் எண்ணத்துடனேயே யன்றோ, அன்னை சானகி அத்தகைய செய்தியை அனுப்பலாயினள்! பிற்காலத் தமிழ் மாதர்களின் வீரத்தை என்னென்று வர்ணிப்பது? தோல் வற்றிய கிழவி ஒருத்தி, தன் மகன் போர் முனையில் புறமுதுகிட்டு உயிருக்கு அஞ்சி ஓடி வந்தானென்று சிலர் கூறக்கேட்டு, 'அங்ஙனமாயின், அக்கோழைக்குப் பாலூட்டிய என் கொங்கைகளை அறுத்தெறிவேன்'—என்று வஞ்சினங் கூறி, போர்க்களம் போந்து தன் மகன் வீரமரணம் அடைந்ததறிந்து அவனைப் பெற்றெடுத்த காலத்தினும் பெருமகிழ்ச்சி பெற்றாளாம்! தன் கணவனைச் செருமுனையில் பறி கொடுத்த மங்கை ஒருத்தி, மறுநாளே போர்ப்பறைகேட்டு வீர உணர்ச்சி மிகுந்து, தனது ஒரே செல்வப் புதல்வனைச் சிங்காரித்து செருக்களத்திற்கு அனுப்பி வைத்தாளாம்! இத்தகைய பெண் தெய்வங்களின் வீரச் செயல்களை, சங்க நூல்களில் பரக்கக் காணலாம்.

'பெண்மை' என்னும் சொல்லுக்கு, 'கட்புலனாயதோர் அமைதித் தன்மை'— என்று பொருள் கண்டார் நச்சினார்க்கினியர். அமைதியின்—பொறுமையின்—வடிவான பெண் தெய்வங்களை, 'மாயை' என்றும் 'பெண்ணாகி வந்ததொரு மாயப் பிசாசம்' என்றும் பழிப்பதும், 'பெண்கள் கல்வியறிவைப் பெறுவராயின், அவர்கள் பல வழிகளிலும் விபரீத வினைகளில் தலைப்படுவர்'—என்று பேசித் திரிவதும் எவ்வளவு அறியாமை! "சிறை காக்கும் காப்பு எவன் செய்யும்?-மகளிர்—நிறை காக்கும் காப்பே தலை"—என்பது நாயனார் பொன்மொழி. இக் கருத்தே,

"குலத்து மாதர்க்குக் கற்பு இயல்பாகுமாம்;
கொடுமை செய்தும் அறிவை அழித்தும் அந்
நலத்தைக் காக்க விரும்புதல் தீமையாம்:
நங்கை கூறும் வியப்புகள் கேட்டிரோ?"

"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்,
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்!". —என்ற

மணிமொழிகளின் வாயிலாக, பெண்கல்விக்குத் தடை செய்வோர் எழுப்பும் ஐயங்கள் யாவும் அகன்றொழியுமாறு பாரதியாரால் செவ்விதில் விளக்கப்பட்டுளது. இக்கருத்துகள் நவீன நாகரிகத்தின் பயனாக ஏற்பட்டவை யென்றும், இவை நமது முன்னோரின் கருத்துகளோடு, முரண்படுபவை யென்றும் பிதற்றித் திரியும் வைதிக—சிரோமணிகள் பலர் உளர். அத்தகைய பித்தர்களுக்குத் தக்க வாயாப்பாக, நமது பாரதியார் அளித்துள்ள விடை இது:—

"புதுமைப் பெண் இவள் சொற்களும் செய்கையும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிதன்றி,

சதுமறைப்படி மாந்தர் இருந்த நாள்
தன்னிலே பொதுவான வழக்கமாம்;
மதுரந் தே மொழி மங்கையர், உண்மை தேர்
மாதவப் பெரியோருடன் ஒப்புற்றே
முதுமைக் காலத்தில் வேதங்கள் பேசிய
முறைமை மாறிடக் கேடு விளைந்ததாம்."

ஆதலால், தமிழா! நீ மேற்கொள்வதற்கு உரிய அஹிம்சா வீரம் செழித்தோங்க வேண்டுமாயின், பெண் தெய்வங்களின் உதவியும் ஆசியும் உனக்கு வேண்டுவது அத்தியாவசியம். 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்து'வது உனது முதற் பெருங் கடமையாயிருக்கட்டும். மூடக் கட்டுகள் யாவும் தகர்த்து, மானிடர் செய்கை அனைத்தையும் கடவுளுக்கு இனியனவாக இயற்றுவதிலே, பெண் தெய்வங்களின் துணை இன்றேல் வெற்றி பெற்றிட முடியாது என்பதை மறந்து விடாதே! ஆதலின், தமிழா! 'அன்பு வாழ்க' என்று அமைதியில் ஆடு; ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்து! நீ வெற்றி பெறுவது நிச்சயம்.

தமிழா! அன்பு நெறியில் விளையும் இன்பமே இன்பம்; உள்ளத்தினின்றும் கிளர்ந்தெழும் உனது வீரம், உனக்கு நேரும் துன்பங்களைக் கண்டு அவமதித்துச் சிரிக்கும் வீரச் சிரிப்பை விளைவிப்பதாக இருக்கட்டும். உனது உடலை மற்றவர் சிறைப்படுத்தினாலும், உனது ஆன்மாவைச் சிறைப்படுத்த எவராலும் முடியாது. உன்னைப் பயன் கருதாப் பணிக்குப் பண்படுத்தும் வண்ணம் இறைவன் விளைவிக்கும் சோதனைகளே துன்பங்கள் என்பதை உணர்ந்து, அவற்றை மகிழ்ச்சியோடு வரவேற்று நிமிர்ந்து நில்! மூர்க்க சக்தியைக்கண்டு மன உறுதி குலையாதே! இடையைச்சுற்றி கந்தலை அணிந்துள்ள நீயும், உனது உச்சக் குரலில் "தமிழன் எனது சகோதரன்! தமிழனே எனது நண்பன்! பாரத தேவியே எனது அன்னை! தமிழகமே எனது குழந்தைப் பருவத்துத் தொட்டில்; எனது காளைப் பருவத்துப் பூஞ்சோலை; தூய ஆசிரமம்; எனது முதுமைப் பருவத்துக் காசி"—என்று கர்வத்துடன் பறையறை. இதோ, இப்பாரதியாரது வீரமொழிகளை உள்ளத்தில் ஊறித் ததும்பும் தேசாபிமான உணர்ச்சியுடன் உச்சக்குரலில் பாடு:—

"தேவர்கள் வாழ்விடம்—திறல் உயர் முனிவர்
ஆவலோடு அடையும் அரும் புகழ் நாடு!
ஊனமொன்றறியா ஞான மெய்ப் பூமி!
வானவர் விழையும் மாட்சியார் தேசம்!
புன் புலால் யாக்கையைப் போற்றியே நம் நாட்(டு)
அன்பிலா திருப்போன் ஆரியன் அல்லன்!"

"ஏழை யென்றும் அடிமை யென்றும் எவனுமில்லை ஜாதியில்;
இழிவு கொண்ட மனிதர் என்பது இந்தியாவில் இல்லையே!
பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை!
பறவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலை!

"கிலி பிடித்த நெஞ்சினாய்! போ! போ! போ!
உறுதி கொண்ட நெஞ்சினாய்! வா! வா! வா!
நன்று கூறில் அஞ்சுவாய்! போ! போ! போ!
தெளிவு பெற்ற மதியினாய்! வா! வா! வா!
ஜாதி நூறு சொல்லுவாய்! போ! போ! போ!
எளிமை கண்டு இரங்குவாய்! வா! வா! வா!
ஒலி இழந்த குரலினாய்! போ! போ! போ!
களி படைத்த மொழியினாய்! வா! வா! வா!".

"ஜயமுண்டு பயமில்லை மனமே!—இந்த
ஜன்மத்திலே விடுதலை உண்டு; நிலை உண்டு:
ஜயமுண்டு பயமில்லை மனமே!".

தமிழா! உனது உள்ளத்திலே வீர உணர்ச்சியைப் பெருக்கும் இவ் வீர மொழிகளை, உனது உச்சக் குரலில் உற்சாகத்துடன் பாடு. இம் மணிமொழிகளின் பொருட் சுவையை நன்குணர்ந்து—இவற்றில் உள்ளம் கலந்து—உயிர் கலந்து—உணர்ச்சி கலந்து உச்சக்குரலில் பாடு. 'பாடிய வாய் தேன் ஊறும் பாரதியார் பாடல்'களை, உள்ளத்தினின்றும் கிளர்ந்தெழும் உயரிய வீர உணர்ச்சியுடன் பாடுவதே பேரின்பம்! வாழ்க பாரதீயம்!

---

# மணிவாசகர் வீரசைவரா?

(K. V. சிவசுப்பிரமணியன். B. A,)

மணிவாசகப் பெருமானின் சரிதத்தை ஆராய்வதற்கு ஆதாரமாயுள்ள நூல்கள் திருவாதவூரர் புராணம், திருவாசகம், திருக்கோவையார் என்பன. இவற்றுள் வாதவூரர் புராணம் இவரது சமயம் சைவமெனவும் குலம் ஆமாத்திய ரெனவுங் கூறுகின்றது. இவ்வரலாறே இப்போது தமிழுலகில் வழங்கி வருகின்றது. ஆனால் யான் எனது ஆராய்ச்சியின் பயனாக அவரது சமயம் வீரசைவம் என்பதைத் தக்க சான்றுகொண்டு விளக்க முற்படுகின்றேன்.

## 1. மணிவாசகரின் சமயம்.

அந்தணருள் ஆராத்திய ரெனவும் ஆதிசைவ ரெனவும், நம்பூரி எனவும், வைணவ ரென்றும், மாத்வர் என்றும், சுமார்த்தர் என்றும் சில வகுப்புகள் உளவேயன்றி ஆமாத்தியரென்று ஒரு வகுப்பின ரிருப்பதாகத் தெரியவில்லை. ஆமாத்தியர் என்னும் ஆரியமொழிக்கு வட மொழிப் புலவர்கள் "மந்திரி" என்று பொருள் கூறுகின்றனர். எனவே, ஆமாத்தியர் என்பது ஒரு தொழிலைக் குறித்ததேயொழிய ஒரு குலத்தைக் குறிக்கவில்லை என்பது பெறப்படும். அவரது பிள்ளைத் திருநாமம் திருவாதவூரர் என்ப. ஒருவர் வசிக்கும் ஊரின் காரணமாக பட்டினத்தார், மதுரையார, வேலூரார் என்று வழங்கப்படுவரேயன்றி அது அவரது பிள்ளைத் திருநாமமாக இருக்க வியலாது. அதுபோலவே திருவாதவூரர் என்பது அவரது பிள்ளைத் திருநாமமன்று. எனவே அவரது இயற்பெயரும் இன்னதென விளங்கவில்லை. நிற்க. மணிவாசகரது இருப்பிடம் கன்னடதேய மென்றும், ஆராத்தியரென்னும் வீரசைவ அந்தணர் குலத்தைச் சேர்ந்தவரென்றும், அவர் தென்றமிழ்நாடுற்று வதிந்தனரெனவும் ஒரு வரலாறு கர்ணபரம்பரையாக வழங்கி வருகின்றது. அது எவ்வளவு உண்மை என்பதை சான்றுகொண்டு ஆராய்வோம். திருவாசகத்தில் அருட்பத்து என்னும் பதிகத்தில் "அதெந்துவே" எனும் கன்னட பதத்தை அமைத்துப்பாடி இருக்கின்றனர். இப்பதம் தமிழில் கிடையாது. "அதெந்துவே" என்றால் "அது எப்படி" என்று பொருள்படும். இதுவேயன்றி பாண்டூர், தேவூர் என்னும் கன்னடநாட்டு ஊர்கள் பலவிடங்களில் கூறப்படுகின்றன. இக் காரணங்களைக் கொண்டு மாணிக்கவாசகரது பிறப்பிடம் கன்னடதேயமாய் இருக்கலாம் என்று ஒருவாறு ஊகிக்க இடமிருக்கிறது. ஆனால் அவர் ஆராத்தியர் எனும் வீரசைவ குலத்தைச் சார்ந்தவரெனக் கூறுதற்கு என்ன ஆதார மிருக்கிறதென ஆராய்வோம். பண்டைக் காலத்திலிருந்த ஏட்டுப் பிரதிகளில் கூட்டெழுத்துக்கள் எழுதுவது வழக்கம். ஆகையால் ஆராத்தியர் என்னும் பதத்தை (ஆரா) என்று எழுதி யிருத்தல்கூடும். ("ரா" எனு மெழுத்தை மூலைகளில்லாமல் ரா என்று கூட்டெழுத்துக்காரர்கள் சுவடிகளில்

எழுதியுள்ளதை இன்றுங் காணலாம்.) எனவே அங்ஙனமெழுதப்பட்ட பதத்தை ஆராத்தியர் என வாசியாமல் ஆமாத்தியர் என வாசித்து "படித்தவன் பாட்டைக் கெடுத்தான், எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்" என்ற பழமொழிப்படி, மாற்றியிருக்கவேண்டும் என்றும் அங்ஙனமே ஆராத்தியர் ஆமாத்தியர் என்று பிற்காலத்தில் வழக்கத்திற்கு வந்திருக்கக்கூடுமெனவுங் கூறுவர் ஒரு சாரார். இவ்வொரு காரணமட்டுங் கொண்டு அவரை வீரசைவரென கூறற்கியலாது. திருவாதவூரர் புராணத்தில் அவர் சைவரா அன்றி வீரசைவரா என்று விளக்காததின் காரணமென்னை? ஆராத்தியர் என்ற பதத்தை ஆமாத்தியர் என்று திருத்தி அமைத்தபின் அவரது சமய சம்பந்தமான பாடல்களையேனும் குறிப்புகளையேனும் நூலில் வைத்திருந்தால் முன்னுக்குப் பின் முரணுமாகலின் அவற்றை நீக்கி விட்டனரென்றே கூறவேண்டும். திருப்பூவல்லியில் 19-பாடல்களும் திருவுந்தியாரில் 19-பாடல்களும் திருத்தோணோக்கத்தில் 14-பாடல்களும் திருப்பொன்னூசலில் 7-பாடல்களும் திருப்படையெழுச்சியில் 2-பாடல்களும், அச்சோப் பதிகத்தில் 9-பாடல்களும் காணப்படுகின்றன. மணிவாசகப் பெருமான் திருச்சதகம் முதலிய ஒவ்வொரு பதிகத்திலும் 10, 20, 50, 100, என்னும் தொகையாக வரையறுத்துப் பாடியிருத்தலின் மேற்கூறிய பதிகங்களில் மட்டும் பாடல்கள் குறைந்திருப்பதற்குக் காரணமென்ன என்ற விஷயம் ஆராய்ச்சிக்குரியதாகும். மற்றும வாதவூரர் புராணச் செய்யுளொன்று,

"திருச்சதக முதலாகச் சிறந்ததமி ழெழுநூறும்
விரித்த வகப்பொருட் கோவை விளங்கவொரு நானூறு
முரைத்தனர் பின் முடிந்தவிடத் துயர்வாத வூரன்மொழி
தரித்தெழுது மம்பலவ னெழுத்தென்று சாற்றினார்."

என்று திருவாசகம் 700-செய்யுளென அறுதியிட்டுக் கூறுகிறது. இப்பாடல் எழுநூறு என்னும் பேரெண்ணைக் குறித்ததேயன்றி அதற்கு மேற்பட்ட சில்லரைத் தொகையைக் கூறவில்லை. எப்படியும் இப்போது சில பாடல்கள் குறைந்திருப்பது வெளிப்படை. ஒருகால் குறையும் பாடல்கள் தேவாரத் திருப்பனுவல்களைப்போல் சிதலைவாய்ப் பட்டிருக்கலாம் எனக் கூறுவதற்கும் இடமில்லை. தேவாரப்பாக்களை செல்லரிக்கப்பட்டதற்கு கதை இருப்பது போல் இதற்குக் கதை இல்லை. எனவே, மாணிக்கவாசகப் பெருமான் கன்னட தேயத்திலே வீரசைவ சிகாமணிகளாகிய ஆராத்தியர் குலத்திலே அவதரித்தவரென்பதை வெளிப்படுத்த விருப்பமில்லாத சிலர் இவ்விதம் பாடல்களைக் குறைத்தும் திருத்தியும் இருக்கலாம். இவர் நந்தியம் பெருமானின் அமிசமாவர் என்று கூறுவாருமுளர். சம்பந்தரை ஆளுடைய பிள்ளையென்றும் அப்பரை ஆளுடைய அரசு என்றும், சுந்தரரை ஆளுடைய நம்பி என்றும் வாதவூரரை ஆளுடைய அடிகளென்றும் (பல நூல்களில் அடிகள் என்று நந்தியெம் பெருமானைக் குறிக்கின்றது) வழங்குதலே இதற்குச் சான்றாகும். வீரசைவ சமயத் தலைவரும் நந்தியின் அமிசருமாகிய வசவதேவரின் சரித்திரமும் மாணிக்கவாசகரின் சரித்திரமும் ஏறக்குறைய ஒத்திருத்தல் காண்க. மணிவாசகர் நந்தியின் கூறாய் அவதரித்தவர் என்றதனால் அவர் வீரசைவர் எனக் கொள்ள இடந்தருகின்றது.

இனி, மணிவாசகர் வீரசைவர் எனக் கோடற்குரிய அகச்சான்றுகள் சிலவற்றை அவரது நூலினின்றும் தர விரும்புகிறேன்.

திருவாசகத்தில் பல விடங்களில் கன்னடதேசப் பெயர்களும் சரித்திரமும் கூறப்படுகின்றன. (1) கீர்த்தித் திருவகவலில்,

மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்கதாகக் காட்டிய தொன்மையும்

என்ற அடிகளில் கன்னட தேயத்தில் நடைபெற்றதாக வசவபுராணம் கூறுகின்ற வள்ளேசர் சரிதங் குறிப்பிடப்படுகின்றது.

(2) சிவபுராணத்தில் 'கோகழியாண்ட குருமணி தன்றாள் வாழ்க' என்ற அடியில் கோகழி' என்னும் கன்னடநாட்டுத்தலம் குறிக்கப்பட்டுள்ளது. மற்றும்

"பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்"

என்ற அடிகளில் பாண்டூர் தேவூர் எனும் கன்னடநாட்டு ஊர்கள் கூறப்பட்டுள்ளன. (3) மற்றும் இப்போது அச்சுப்பிரதிகளில் கிடைக்காத சில திருவாசக ஏட்டுப்பிரதி பாடல்களில் அவரே தன்னை வீரசைவரென விளக்கியிருத்தல் காண்க. அவை வருமாறு:—

எத்தனையோ மெய்யன்ப ரேமாக்க நாயடியேன்
சித்தமயக் கத்தனையுந் தீர்ந்தே யிறுமாக்க
வித்தரையி லங்கலிங்க வேகாந்த மெற்களித்த
புத்தமுதைப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. —திருப்பூவல்லி.

புரங்களோர் மூன்றும் பொடிபட மூவ
ரரந்தை யடைந்தில ருந்தீபற
வவர்கள் சிவாத்துவித ருந்தீபற. —திருவுந்தியார்.

கண்டமுறாஞ் சிரம் வலதுகரமி விடத் தாலால
முண்ட தனது வுருத்தரித்தே யுலவு சிவசரண ரெனுந்
தொண்டனைத் தொருவனெனத் தொல்லுக ரேத்தும் வண்ணம்
அண்டர்பிரா னருளியவா றூர்பெறுவா ரச்சோவே.

—அச்சோப்பதிகம்.

மேற்கூறிய விடுபட்ட பாடல்களில் வரும் "அங்கலிங்க ஏகாந்தம்" "சிவாத்துவிதர்" 'சிவசரணர்" என்னும் சொற்றொடர்கள் முறையே வீரசைவ சித்தாந்தத்தையும் வீரசைவ மாகேஸ்வரையும் உணர்த்துகின்றன.

4. பிடித்த பத்தில் "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவ தினியே" என்றார். சைவர்கள் சிவலிங்கத்தை பூசைப்பெட்டியில் வைத்து வழிபடுவது போலல்லாமல் வீரசைவர்கள் அங்கம் வேறு இலிங்கம் வேறு என்ற பேதபாவனையை யொழித்து அங்கலிங்க சையோகமாய் இருப்பதால் "உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்" என்றார். இதே கருத்தை கோயின் மூத்த திருப்பதிகத்தில்,

"உடையாளுன்றன் நடுவிருக்கு முடையாணடுவு ணீயிருத்தி
யடியனே னடுவுளிருவீரு மிருப்பதானு லடியேனுன்
அடியார் நடுவுளிருக்கு மருளைப்புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியாமுதலே யென்கருத்து முடியும்வண்ண முன்னின்றே"

என்று விளக்கினர்.

5. மற்றும் பிடித்த பத்தில் அவர் தமக்கு ஆசார்ய தீட்சையான காலத்தையும் அதற்குமுன் தான் அடைந்திருந்த துன்பத்தையும் கீழ்வரு மடிகளில்

"இருளிடத் துன்னை சிக்கெனப் பிடித்தேன்"
"இரவிலே யுன்னை சிக்கெனப் பிடித்தேன்"
"எய்ப்பிடத் துன்னை சிக்கெனப் பிடித்தேன்" என்றார்.

இராக்காலமே பிராணிகளின் விவகாரமுற்றும் ஒடுங்கிய காலமாதலானும், அப்போதுதான் மனோலய முண்டாகு மாதலானும், மனோலயமே சிவபெருமானை பூசிக்கவும் வணங்கவும் ஏற்ற தருணமாதலானும், ஆகமங்களும் அக்காலமே தீக்ஷாகாலமெனக் குறிப்பதாலும் மணிவாசகர் இரவில் தீட்சை பெற்றதாகக் குறித்தது பொருத்தமானதே. அவர் ஞானசிரியனை யடைந்து தீட்சை பெற்ற இடம் திருப்பெருந்துறை என வாதவூரர் புராணங் கூறுகின்றது.

இனி மணிவாசகர் வீரசைவ சமயத்தைச் சேர்ந்தவரெனக் கொள்ளுதற்குரிய புறச்சான்றுகள் சிலவற்றை ஆராய்வாம்.

இப்போது தேவாரம் பெரும்பாலும் சைவர்களாலும் திருவாசகம் எல்லா வீர சைவர்களாலும் ஓதப்பட்டு வருகின்றன. (2) இக்காலத்தில் சிறு குழந்தைகள்முதல் பெரியோர்வரை வீரசைவர்களில் திருவாச்கத்தில் ஒரு பாடலேனும் தெரியாதவர்களில்லை. அன்றியும் திருவாசகம் ஓதுவிக்க எண்ணங்கொள்பவரெல்லாம் இலிங்கதாரிகளை வரவழைத்தே ஓதச்செய்வது நாளைக்கும் வழக்கமாக இருந்து வருகிறது. (3) இந்நாளில் திருவாசகத்தை தொன்று தொட்டு நாளது வரையில் பூசித்துக்கொண்டும் அதற்கென ஓர் மடமும் ஏற்படுத்திக்கொண்டும் பரம்பரையாக மணிவாசகரது நட்சத்திரத்தன்று விழா நடத்திக்கொண்டும் வருபவர்கள் வீரசைவர்களே. அதனை இன்றும் சிதம்பரத்திலும் புதுவையிலுமுள்ள அம்பலத்தாடுவார் மடத்தில் காணலாம்.

(4) இப்போது மரணகாலத்தில் சைவ வீரசைவர்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் திருவாசகம் ஓதப்படுகிறதேயன்றி தேவாரம் ஓதப்படுவதில்லை.

இங்ஙனமாக, மேற்கூறிய சான்றுகள் பலவற்றைக்கொண்டு, வான்கலந்த மாணிக்கவாசகப் பெருமான் வீரசைவ சமயத்தைச் சார்ந்தவராக இருத்தல் வேண்டும் என ஒருவாறு துணியப்படுகின்றது. இச்சான்றுகளைக் கொண்டே மணிவாசகரின் காலத்தை ஆராய்வோம்.

## 2. காலம்

"சைவ சமய குரவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் வீரசைவ மதத்தினரென்று இக்காலத்துப் பண்டித ரொருவர் ஸ்தாபிக்க முயன்றார். கி. பி. 12-ம் நூற்றாண்டின்முன் வீரசைவம் எந்நாட்டிலும் இருந்தில தாகலானும்,

அக்காலத்திலாயினும் அதற்குப் பின்னராயினும் திருவாசக முடையார் திகழ்ந் தாரெனல் அவருடைய சரித்திரத்தோடு முற்றும் முரணுமாகலானும் அது பொருந்தாது."

என சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் S. அனவரத விநாயகம் பிள்ளை என்பார் தாம் 1907ம் ஆண்டு பதிப்பித்த "திருவாசகம்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். அது தவறாகும். வீரசைவ சித்தாந்தம் வேதாகம காலந்தொட்டு வழக்கிலிருந்துவருகிறது. வீரசைவ மெய்ந் நெறியும், பஞ்சாசாரியர்களின் அவதாரமும் அனுக்கிரகமும் வீரலிங்கோபநிஷத் முதலிய உபநிடதங்களிலும், காமிகாகமம், வீராகமம், வாதுளாகமம், பாரமேஸ்வராகமம், சுப்ரபேதாகமம் முதலிய ஆகமங்களின் உத்தர பாகங்களிலும் பரக்கக் கூறப்படுகின்றன. பரமசிவனது பஞ்ச முகங்களினின்றும் இரேவணாராத்யர், மருளாராத்யர், பண்டிதாராத்யர், ஏகோராமாராத்யர், விஸ்வாராத்யர் என்னும் ஐம்பெருந் தலைவர்கள் உற்பவித்து முறையே ரம்பாபுரி, உஜ்ஜயினி, ஸ்ரீசைலம், பதரிகேதாரம், காசி எனுமிடங்களில் தமது சிம்மாசனங்களை ஸ்தாபித்துச் சென்றதாக பரமேஸ்வராகமம் கூறுகின்றது. சுவாயம்புவாகமத்தின் 9வது படலத்தில் ஆதி ஆசாரியர்களின் பெயர்கள் தெளிவாகக் கூறப்படுகின்றன. வீரசைவ சமயத்தின் தொன்மையை விளக்க இன்னும் சில ஆதாரங்களை எடுத்துக் காட்டுவோம்:—

(1) இற்றைக்கு சுமார் ஆறாயிரமாண்டுகட்கு முன், சிவயோகி ராட் என்பார் சித்தாந்த சிகாமணி என்ற ஒரு நூலை வடமொழியில் இயற்றியருளினார். அதுவே பிற்காலத்தில் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. (2) வியாச பாரதத்தில் அனுசாசன பருவத்தில் தருமருக்கும் பீஷ்மருக்கும் நடந்த ஒரு சம்பாஷணையில் அக்காலத்தில் வீரசைவ சமய மிருந்ததாகத் தெரிகிறது. (3) வடமொழிக் கந்தபுராணம் சங்கர சம்ஹிதையில் பிங்கலனென்னுமோ ரந்தணன் சதாநந்த முனிவரால் வீரசைவ னாக்கப்பட்டமை கூறப்படுகின்றது. (4) சங்கராசாரியாரது தாய் தந்தையர் மகப்பேறின்மையால் சிவபெருமானை சங்கம மூர்த்தியாக வழிபட்டு சங்கரரைப் பெற்றனர் என்ப. (5) கி. பி. 1165-ஆண்டில் திரிபுவன தாதா என்னும் வேதியர் பதுமராசு என்னும் வீரசைவ பண்டிதரோடு வாதிட்டு தோற்று வீரசைவராயினர். (6) கி. பி. 1195-ல் சக்கரபாணி ரங்கநாதர் என்னும் வைணவ அந்தண ரொருவர் பால்குருகி சோமநாத ஆராத்தியர் எனும் வீரசைவப் பெரியாருடன் வாதில் தோல்வியுற்று வீரசைவ மெய்ந்நெறியைக் கடைப்பிடித்தன ரென்ப. (7) இற்றைக்கு 5500 ஆண்டுகளுக்கு முன்னிருந்த ஜனமேஜய மன்னன், அப்போது கேதார பீடாதி பதியாய் விளங்கிய ஆனந்தலிங்க ஜங்கம சுவாமிகளுக்கு நிலங்களை நன்கொடையாகக் கொடுத்ததைப் பற்றிய கல்வெட்டு பின் வருமாறு:—

"I, Sreeman Maharajadhiraja Janamejaya Boopala, King of Hastinavathi and preserver of the four Varnasramas, make on this Monday, the Amavasya day of the lunar month Margaseersha in the cyclic year Plavanga corresponding to the 89th year of the Yudhistra Era, grant of the land lying between the rivers Mandhakini, Ksheeraganga, Madhuganga, Swargadwaraganga, and the confluence of the Saraswathi and Mandhakini

for the purpose of worship of the God Kedaranath through Ganesalinga Jangama, the resident of Sri Kedhar Kshetra and the disciple of Sri Goswamy Anandhalinga Jangama, the spiritual head of Okhi Math in order to procure for my parents the eternal bliss of living in the abode of Shiva............................................................May it happen that those who misappropriate this gift of mine will be born again and again as worms on earth for sixty thousand years.

கல்வெட்டுகளின் ஆராய்ச்சியால் ஜனமே ஜய மன்னனின் காலம் கி. பி. ஆறும் நூற்றாண்டென நிலை நிறுத்தப்படுகின்றது. (8) Many stone and copper plate inscriptions bear witness to the fact even four or five thousand years ago, several kings in India had been initiated with Lingadharana" என வட நாட்டாராய்ச்சியாளர் ஒருவர் கூறியுள்ளார். (9) மற்றும் வில்லியம்ஸ், மூர், வில்சன், டாக்டர் பர்னார்டு முதலிய பல மேனாட்டாசிரியர், வீரசைவ சமயமானது மிகப் பழமையான தென்று தங்கள் தங்கள் ஆராய்ச்சியால் முடிவு கூறியுள்ளனர்.

இதுகாறும் அகப்புறச் சான்றுகள் பலவற்றின் ஆதாரவால் மாணிக்கவாசகரைக் கூறினேன்.

நால்வர் என்ற சொற்றொடர் இடைக்காலத்தி லெழுந்ததொன்றே. தாயுமானவர் காலம் இற்றைக்கு 250 ஆண்டுகட்கு முன் ஆதலானும், அவர் காலம் வரை மூவரென வழங்கி வந்திருந்தமையாலும் "நால்வர்" என்ற சொற்றொடர் அவருக்குப் பின்னர்தான் ஏற்பட்டிருத்தல் வேண்டும். எனவே மாணிக்கவாசகப் பெருமானை மூவரோடும் சேர்த்துரைக்காமையும் அவரது நூல்களைத் தனித் திருமுறைகளாக வகுத்தமையுமே அவர் வீரசைவ ரென்பதைப் புலப்படுத்துகின்றன.

(2) மணிவாசகப் பெருமான் திருக்கோத் தும்பியில் 2-ம் செய்யுளில்

"கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்"

என்று கண்ணப்பனையும், "தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானை" என சண்டேசுர நாயனாரையும் கூறியுள்ளா ராகலின் அவர் கண்ணப்பரது காலத்திற்கு பிற்பட்டவரென்பது பெறப்படுகின்றது.

(3) "அருப்பொட்டு மூலை மடவாள்......................
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்......................புனித னூர்க்கே" என்ற

திருப்பூவணத் திருத்தாண்டகத்தில் வாகீசப் பெருந்தகையார், சிவபெருமான் வைகையில் மண்சுமந்த திருவிளையாடலைக் கூறியுள்ளார். இக்குறிப்பினால் மாணிக்கவாசகர் காலம் மூவருக்கும் முற்பட்டது என்பது பெறப்படும். (4) திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் மணிவாசகரைக் குறியாது விட்டமையான், அவர் சுந்தரருக்கும் பிற்பட்டவரென்பர் ஒரு சாரார். மணிவாசகர் வீரசைவ சமயாசாரியரா யிருந்தமையின், சைவ சமய குரவரோடு

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.



(126-வது பக்கத் தொடர்ச்சி.)

## அதிகாரம்—3.

### பொருளாதாரக் கொள்கையின் சரித்திரம்

பொருளாதாரக் கொள்கையின் சரித்திரத்தைப்பற்றி (History of Economic Thought) ஈண்டு நாம் சொல்ல வேண்டுவது முக்கிய கடமையாக இருக்கிறது. அதைச் சுருங்கச் சொல்வோம்.

ஆசியா கண்டத்தில் பொருளாதாரக் கொள்கையைப் பற்றி இன்னும் சரியாக ஆராய்ச்சி செய்யப்படவில்லை. ஆனால் இந்தியாவிலும் சீனாவிலும் பழைய காலத்தில் பொருளாதார நிலைமையைப் பற்றிப் பேசிய நூல்கள் இருந்தன. அவை சரியாக ஆராய்ச்சி செய்யப்பட்டால் மிகவும் நன்றாக இருக்கும்.

### இந்தியாவில் பொருளாதாரக் கொள்கை

ஆதி காலத்தில் இந்தியாவில் வேத காலத்து மனிதர்கள் உழவுத் தொழிலிலிருந்தும் சாமான்கள் செய்வதும் அவற்றை விற்பதும் ஆன நிலைமைக்கு வந்

---

சேர்த்துக் கூறும விருந்திருக்கக் கூடுமாகலின், இக்கருத்துப் பொருந்தாது. (5) திருக்கோவையாரில் வரகுண பாண்டியன் என்னும் பெயர் குறிக்கப்படுதலால் அவர் அவனது காலமாகிய 9-ம் நூற்றாண்டி லிருந்தவ ரென்று ஒரு சாரார் கூறுவர். (6) அம்பலம் பொன்வேய்ந்த பராந்தக சோழனுக்கு முன் பொன்னம்பலமென்னும் வழக்காறில்லை யாகலின் மாணிக்கவாசகர் அவன் காலமாகிய 10-ம் நூற்றாண்டி லிருந்தாரெனக் கூறுவாருமுளர். (7) அரிமர்த்தன பாண்டியனிடம் மணிவாசகர் அமைச்சராய் இருந்தது உண்மை. பரஞ்சோதியார் திருவிளையாடலில் வரகுண பாண்டியனைப் பின்பற்றி சுமார் 40 அரசர் ஆண்ட பின்னர் அரிமர்த்தன பாண்டியன் ஆண்டானென்றும் அவனுக்குப் பின் பதின்மர் பாண்டியர் ஆண்டபின் வந்தவன் கூன்பாண்டிய னென்றும் காலவரையறை கூறப்படுகின்றது. எனவே மாணிக்க வாசகருக்குப் பின்னரே ஞானசம்பந்தரும் அப்பரும் இருந்திருக்கவேண்டும். (8) மாணிக்க வாசகர் சங்ககாலத்தி லிருந்தவரெனக் கூறுவாருமுளர்.

இங்ஙனம் பலதிறப்பட்ட சான்றுகளும் ஆராய்ச்சிகளும் எழுந்த காரணத்தால் மாணிக்கவாசகர் காலம் இன்னதெனத் துணிந்து கூறற்கியலாதாயிற்று. இத்தகைய ஆதாரங்கள் பலவற்றையுங் கொண்டு இக்காலத்தில் மாணிக்கவாசகர் காலத்தை கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டென்று ஆராய்ச்சியாளர் முடிவு கூறுகின்றனர்.

தனர். மௌரிய அரசர்கள் காலத்தில் சந்திரகுப்தனும் அசோகனும் பொருளாதார அபிவிருத்தியை முன்னிட்டுப் பல விஷயங்களைக் கவனித்திருக்கின்றார்கள். இந்தியாவில் செய்யப்பட்ட வஸ்துக்கள் அயல் நாடுகளுக்கு ஏராளமாகச் சென்றன. அயல்நாட்டு வர்த்தகர்கள் இந்தியாவுக்கு வந்து வியாபாரம் செய்தனர். கிரேக்க ஞானி அரிஸ்டாடில் காலத்தில் இந்தியாவில் மௌரிய அரசன் சந்திரகுப்தனுக்கு பிரதம மந்திரியாக இருந்த கௌதில்யா அல்லது சாணக்கியன் என்று சொல்லப்பட்ட பிராமணன் பிரதம மந்திரியாக விளங்கினான். அவன் அரிஸ்டாடிலை விடச் சிறந்து விளங்கிய புத்தியைக் கொண்டிருந்தான் என்பது சரித்திராசிரியர்களுடைய கருத்து. அரிஸ்டாடில் வியாபாரம், வட்டி, பண்டங்களை மாற்றுதல் முதலானவற்றைக் கண்டித்தான். ஆனால் கௌதில்யா அவற்றின் பேருண்மைகளை நன்கறிந்து அவற்றின் பிரயோஜனங்களை "அர்த்த சாஸ்திரம்" எனும் புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறான். அவை இன்றேல் ஒரு நாடு முதன்மையுடன் விளங்காது என்பது புராதன இந்திய ஆசிரியர்களின் கருத்தாகும்.

## ஐரோப்பிய பொருளாதாரக் கொள்கை

**கிரேக்க நாடு.**

பிளேடோ (Plato), செனோபன் (Xenophon), அரிஸ்டாடில் (Aristotle) ஆகிய மூன்று பேர் பொருளாதார நூல் வரைவோர்களுக்கு உபயோகம் கொடுக்கத் தக்கவர்களாக இருக்கின்றார்கள். கிரேக்கர்களுடைய வாழ்க்கை லட்சியங்களில் நீதியும் ராஜரீக தத்துவமும் மிகவும் சிறந்த நோக்கங்கள்; பொருளாதாரக் கொள்கையைப் பற்றிய விஷயங்கள் யாவும் அவற்றிற்கு கீழே இருந்து வந்ததால் முதன்மை பெற முடியவில்லை. கிரேக்கர்கள் அடிமைத்தனம் (slavery) என்பதை ஒரு பொருளாதார லட்சியமாகக் கொண்டு, அதைப் பெரிதும் போற்றி வந்தார்கள். உழைப்பின் பிரிவை (Division of Labour) ஆதரித்துப் பேசினார்கள். வட்டி, வியாபாரம் முதலானவற்றைக் கண்டித்துப் பேசி அவற்றை இகழ்ந்தனர்.

**ரோமர்கள்**

கிரேக்கர்களிடமிருந்தும் ரோமர்கள் தங்களுடைய பொருளாதார லட்சியங்களைப் பெற்றார்கள். ஆதலின் அவர்களும் வட்டி, வியாபாரம் முதலியவற்றை இகழ்ந்தனர். விவசாயத்தைப் போற்றினர். பழைய காலத்து ரோமாபுரி வாசிகளுடைய பொருளாதாரக் கொள்கைகளையும் வாழ்க்கை லட்சியங்களையும் பற்றி ரோமன் சட்டம் மிகுந்த விஷயத்தைக் கொடுக்கிறது.

## மத்திய கால ஐரோப்பா (*Europe of the Middle Ages.*)

கற்றறிந்த மனிதர்களும் கிறிஸ்துவப் பாதிரிகளும் சாஸ்திரிகளும் வட்டி வாங்குதலைப் பற்றி பலமாகப் பிரசாரம் செய்து கண்டித்தார்கள். கிறிஸ்துவ வேதமாகிய பைபிலில் சொல்லப்படுவதற்கு அது முரணாக இருப்பதாகச் சொல்லினர். ஆதலால் நியாய விலை எனும் கொள்கையை (The theory of Just Price)ச் சிருஷ்டித்து அதை ஆதரித்துப் பேசினார்கள்.

## தற்காலத்தில் பொருளாதாரக் கொள்கைகள் (*Economic thought in Modern Times*)

சாஸ்திர சம்பிரதாயங்களை யனுசரித்து ஈகோனமிக்ஸ் என்று சொல்லப்

படும் பொருள் நூல் ஐரோப்பாவில் உண்டாகிறது. பிஸியோகிரட்ஸ் (Physiocrats) முதன் முதலில் கியாதி பெற்றவர்கள். ஆனால் மர்கெண்டி லிஸ்ட்ஸ் (Mercantilists) முதலில் தமது கொள்கையைப் பொருளாதாரத் துறையில் உபயோகித்தார்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

## மர்கெண்டிலிஸம் (*Mercantilism*)

இதை கால்லர்டிசம் அல்லது வியாபாரக் கொள்கை முறை என்றும் சொல்லலாம். உண்மையை ஆராயுமிடத்து இந்தக் கொள்கையை ஆதரித்த பொருளாதார விற்பனர்கள் ஒரு ஒழுங்கு முறையோடு நடந்து, சரிவரக் கொள்கையை ஆதரித்து வந்ததாகச் சொல்லிவிட முடியாது. ஆனால் இந்த வியாபாரக் கொள்கை அப்பொழுது ஐரோப்பாவில் தலை சிறந்து ஓங்கி வளர்ந்தது. ஐரோப்பிய ராஜ தந்திரிகளே இதன் வளர்ச்சிக்கு காரண கர்த்தாக்களாக இருந்தார்கள். பிரான்ஸ் தேசத்தில் கால்பர்ட் (Colbert), இங்கிலாந்தில் கிராம்வெல் (Cromwell), ஆகிய இருவர்களும் இந்தக் கொள்கைக்குத் தூண்போல் நின்று ஆதரித்தார்கள். ஏனையோர் இந்தப் பொருளாதாரக் கொள்கையைப் பற்றி நூல்களை வரைந்தார்கள். இந்தக் கொள்கை வருவதற்கு எது காரணமாக இருந்தது?

அமெரிக்காவில் பொன்னும் மணியும் அகப்படும் சுரங்கங்கள் கண்டு பிடிக்கப் பட்டதும், ஸ்பெயின் தேசத்தார் ஐரோப்பாவில் அதன் மூலியமாக ஒரு மகோன்னத நிலையை அடைந்தனர். அந் நிலையைக் கண்ட இங்கிலாந்து, இதாலி, பிரான்ஸ் முதலான தேசங்கள் தாங்களும் சுரங்கங்கள் இல்லாமல் எப்படி மகோன்னத நிலைமையைப் பெறலாகும் என்பதை யோசித்தன; பொன்னும் வெள்ளியும் எப்படி வரும் என்பதை நன்கு யோசனை செய்தன. பல ஆராய்ச்சிகள் நடைபெற்றன. அதன் பலனே மர்கெண்டிலிசம் (Mercantilism) என்று சொல்லப்படும் வியாபாரக் கொள்கையாகும். இந்தக் கொள்கை பின்வருமாறு:—

ஒரு தேசம் சுரங்கங்கள் இல்லாமலே பொன்னும் வெள்ளியும் பெறுவதற்கு அத் தேசத்துச் சர்க்கார் அந்நாட்டு வெளி வியாபாரத்தை ஒரு ஒழுங்கு முறையில் அநுஷ்டிக்க வேண்டும். வியாபாரக்கொள்கையை யநுசரித்த ஆசிரியர்கள் அதை நன்கு அறியுமாறு ஜனங்கள் பொருட்டு நூல்கள் வரைந்தார்கள். சர்க்கார் உள்நாட்டுச் சாமான் அபிவிருத்தி சாலைகளுக்கும் பணம் கொடுத்து உதவ வேண்டும். பின்பு அவற்றை ஏற்றுமதி செய்வதிலும் உதவியளிக்க வேண்டும். தங்கள் நாட்டுச் சாமான்கள் மிகவும் அதிகமாக வெளிநாடுகளுக்குச் சென்று விற்பனை செய்யப்பட வேண்டும். ஆனால் இறக்குமதி செய்யப்படும் சாமான்கள் ஏற்றுமதியாகும் சாமான்களை விட மிகவும் குறைவாக இருக்க வேண்டும். இதனால் மர்கெண்டிலிசம் கொள்கையை யநுசரித்தவர்கள் பணம் திரும்பிவரும் எனும் கருத்தைக் கொண்டிருந்தார்கள். அதிக ஏற்றுமதி அதிக பணத்தைக் கொடுக்கும் எனும் கருத்தைக் கொண்டிருந்தார்கள். இரண்டாவதாக அவர்கள் விவசாயத்தை விருத்தி பண்ணுவதைக் காட்டிலும் வெளி நாட்டுக்கு வேண்டிய சாமான்களை உண்டாக்குவதைச் சர்க்கார் ஆதரிக்க வேண்டும் என்பதைச் சொன்னார்கள். மேலும் இந்தக் கொள்கையை நன்றாக அமுலுக்கு கொண்டுவர கண்டிப்பான சட்ட திட்டங்களைச் சர்க்கார் கையாள வேண்டும் என்பதை வற்புறுத்தினர்.

இந்த வியாபாரக் கொள்கையை ஆராய்ச்சி செய்யுமிடத்தில் இது உண்மையாக ராஜீயக் கொள்கை என்பது வெளிப்படும். அரசாங்கத்தின் வன்மையை யநுசரித்தே ஒரு நாட்டிற்குப் பொன்னும் வெள்ளியும் வரும் என்பது இதனால் தெரிகிறது. பதினாறாவது நூற்றாண்டு முதல் பதினெட்டாவது நூற்றாண்டின் மத்திய காலம் வரையில் இக் கொள்கை அநுஷ்டானத்தில் இருந்து வந்தது.

## பிஸியோகிரட்ஸ் (*The Physiocrats*)

சாஸ்திர முறைப்படி இந்தக் கூட்டத்தினர் தமது கொள்கையை வெளியிட்டனர். வியாபாரக் கொள்கையைக் கண்டித்துப் பேசினார்கள். ஒரு தேசத்தின் சர்க்கார் உண்டாக்கும் சாமான்களையும் தொழிற்சாலைகளையும் மட்டிலும் ஆதரிப்பது கூடாது என்று வற்புறுத்தினார்கள். க்விசனே (Quesnay) கூர்னே (Gournay), டர்கோ (Turgot) ஆகிய மூவர் இந்தக் கொள்கையை முன்னேற்ற மடைவதற்குத் தூண் போல் இருந்தார்கள். இவர்கள் சொல்லிய விஷயங்களின் சாராம்சம் கீழ் வருமாறு:—

உலகமும் மனித சுபாவமும் இயற்கையின் சட்டங்களால் (Natural Laws) பீடிக்கப்படுகின்றன. மனிதர்கள் இந்த இயற்கை சட்டங்களை யநுசரணை செய்து நடந்தால் அவர்களுடைய நேசபாசங்கள் நியாய விதிகளைப் பொறுத்து நிற்கும். அதனால் பிஸியோகிரட்ஸ் கூட்டத்தினர் தன்னிச்சைப் பிரகாரம் வியாபாரிகள் நடந்து கொள்ள வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறினார்கள். இந்த தன்னிச்சைபோல் நடந்து கொள்ளும் கொள்கைக்கு ("Laissez faire") என்று சொல்லுவார்கள். இதன் கருத்து என்ன? தொழில்களிலும் வியாபாரத்திலும் சர்க்கார் தலையிடக் கூடாது. தன்னிச்சைப்படி அவை விருத்தியடைய வேண்டும். சுயாதீனம் அவைகளுக்கு இருக்க வேண்டும். அரசாங்க சட்டங்களுக்கு அடங்கி வியாபாரமும் தொழில்களும் நடை பெறலாகாதென்று அவர்கள் அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். அவர்கள் சுயேச்சையான வியாபாரம் (Free Trade) என்பதை ஆதரித்துப் பேசினர்.

விவசாயம் ஒரு நாட்டிற்கு மிகவும் அவசியமானது என்பதை அவர்கள் கணக்குகளோடு எடுத்துக் காண்பித்து, விவசாயத்தைச் சர்க்கார் கவனிக்க வேண்டும் என்பதைச் சொல்லி யிருக்கின்றார்கள்.

விவசாயம் ஒரு நாட்டிற்கு அளவற்ற செல்வ விருத்தியைக் கொடுக்கிறதென்பதைச் சொல்லியுளர். அதனால் அவர்கள் ஒரு தனியான நேர் வரி (A Single Direct Tax) யை ஆதரித்தனர். அது நிலத்தின் மீது மட்டும் விதிக்கப்பட வேண்டும் என்றார்கள்.

பிஸியோகிரட் கொள்கை வியாபாரக் கொள்கைக்கு மாறுபட்டதாக இருந்தாலும் அதைக் கண்டிப்பதாக இருந்தது. பிஸியோகிரட் கொள்கையை ஆதரித்தோர் விவசாயத்தைப் பற்றி அதிகமான நம்பிக்கையைக் கொண்டு, அதை சர்க்கார் ஆதரிக்க வேண்டும் என்றார்கள். அது அவ்வளவு உசிதமான கொள்கையாகத் தோன்றவில்லை. (தொடரும்.)




# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

இனி "நோய்க் கிடங்கொடேல்" என்பது. இது நீ அவபத்தியம் செய்து வியாதி நிலைத்திருக்க வழி செய்யாதே என்பதாகும். நோய்வராமல் இருக்கும்படி ஒழுங்காக நடந்து கொள்ளுவதும், தவறி வந்த நோயை (ஒவ்வாத உணவுகளை சுவைப்பித்தினால் உட்கொண்டு) வளர்த்துத் துன்புறுதலும் என இருவகைப்படும். நோய் வருவதற்கு மூலம் உடலுக்கும் ஜீரணக் கருவிகளுக்கும், கால நிலைக்கும் ஒவ்வாத உணவுகளை அளவுக்குமேல் புசிப்பதும், சரீர உழைப்பின்றி யிருப்பதும், தூக்கத்தை வலியத் தடுத்தலும் ஆசைக் கடிமையாகி ஒழுக்கங் கெடுதலுமே என்பது தெளிவு. அவ்வாறு கண்டிப்பாக ஒழுகாமல் நோயை வரவேற்பவர்கள் பிறகாவது அவபத்தியம் செய்யாமல் உறுதியுடனிருந்து அந் நோயினின்றும் விடுதலை பெற வேண்டுமென்பது மூதாட்டியார் கருத்து. இது விஷயமாக மகாத்மா காந்தியடிகள் இன்னும் பல படி மேலேறி அறிவுறுத்தி யுள்ளார். அதாவது ஒழுக்கந்தவறி அதனால் நோய் வாய்ப்பட்டு பரிதபிக்கத்தக்க நிலையில் இருப்பவர்களிடம் கருணைகாட்ட விரும்புவோர்கள் அவர்களுக்கு அந் நோய் விரைவில் குணப்படும்படியான சிகிச்சைகளை செய்யாமல் இயற்கை விளைவை அநுபவிக்கும்படி விட்டுவிடுதல்வேண்டும் என்பதே. நீண்ட கால நோயின் கொடிய அநுபவம் அவர்களை மீண்டும் அத்தகைய தவறுகளில் செல்ல வொட்டாமல் தடைசெய்யும் ஆதலின் அது பேருபகாரமென்பது கருத்து. பொதுவாக வக்கீல்கள் இல்லாவிடில் வழக்குகள் இல்லை, வைத்தியர்கள் இல்லாவிடில் வியாதிகள் இல்லை யென்பதும் பலர் கொள்கை. இரண்டும் அவசியமாகக் கொள்ளவேண்டிய சமயங்களும் உண்டாயினும் பெரும் பான்மையான விளைவு அநுகூலம் அன்றென்பது தெளிவாகும். நிற்க நோய்க் கிடங்கொடேல் என்பதற்கு வந்த உடனே சிகிச்சைசெய்து சுகப்படுத்திக்கொள் என்று பெருமாட்டியார் ஏன் கூறியிருக்கக் கூடாது என்றும் வினவலாம். அது அந்நீதிக்குக் கருத்தல்ல. ஜுரம் வந்தவன் சில நிமிஷங்களிலேயே அதை நிறுத்தக்கூடிய நவீன ஆங்கில ஔஷதங்களை உபயோகித்துச் சுகப்படுகிறான். ஆனால் அம்மருந்து அந்த ஜுர வேகத்தை உள்ளே அழுத்திவைப்பதே தவிர அறவே ஒழிப்பதில்லை; தலைநோய் வந்தவன் சில விநாடிகளில் அதைத் தடுக்கும் மாத்திரைகளை உட்கொள்ளுகிறான். ஆனால் அதன் விளைவாக முக்கிய கருவிகட்கிடமாகிய இருதயத்தை பலவீனப்படுத்தி இதைவிடக் கடுமையான நிரந்தரமான வியாதி

யஸ்தனாகிறான். இத்தகைய தாற்காலிகமான பரிகாரங்கள் சீக்கிரம் மனிதனைத் தேற்றி மீண்டும் அவபத்தியம் செய்யும்படி தூண்டும். ஆதலினால் இத்தகைய பரிகாரங்களைக் கொள்ளும்படி சொன்னதாக நாம் பொருள் கொள்ள இடமில்லை. இம் முறைகளும் ஆங்கில சிகிச்சா முறைகளேயன்றி ஆயுர்வேத சிகிச்சா முறைகளல்ல என்பதை நாம் நினைவில் வைக்கவேண்டும். நோய்க் கிடங் கொடாமல் உணவுகளைப் பக்குவமாக அளிக்கவேண்டிய பொறுப்பு தாய்மார்களுடையதே. அவர்களை நோக்கியும் மூதாட்டியார் கூறியதாகக் கொள்வது சிறப்புடைத்து. முற்காலத்தில் பதினைந்து தினங்கட் கொரு முறை நமது நாட்டில் உழைப்பின்றி வளர்ந்து பயன்தரும் ஆமணக்கெண்ணெயைப் பேதிக்குக் கொடுப்பதும், மறுதினம் வேப்பிலைக் கொழுந்துகளும் சிறிது ஓமமும் சேர்த்து அரைத்துச் சிறு உண்டைகளாக்கி அதிகாலையில் உட்கொள்ளச்செய்து பிறகு பழைய அன்னம் உண்பிப்பார்கள். தற்காலத்தில் இதைச் சொன்னால் கேட்கவாவது எந்தச் சிறுவர்கள் உடன்படுவர். விளக்கெண்ணெயின் பெயரையும் வேப்பிலையின் பெயரையும் சொல்லக் கேட்டாலும் சிறுவர் முகம் வேறுபட்டு விகாரப்படும். அவ்வளவென்ன, தாய்மார்களாகவுள்ள தற்காலப் பெண்களே மேற்சொன்ன வஸ்துக்களைத் தங்கள் அருமைச் சிறுவர்களுக்குக் கொடுக்க மனம் இசைவார்களா? அவைகளை அருவருப்பின்றிக் கைகளினால் தொடத்தான் செய்வார்களா? தற்கால நாகரிகமென்னும் வியாதிக்கு மனமாற்றமே மருந்தன்றி வேறுவழி இல்லை. அம் மனமாற்றம் கால தேவதையின் கருணையினால் வரல்வேண்டும். ஔவையார் அருள் மொழியின் பெருமை அப்போது மலர்ந்தரும். பகுத்தறிவுடைய மக்கள் விஷயத்தில்தான் இத்தனை நீதிகளும் போதங்களும் வேண்டியிருக்கிறது. பட்சி மிருகங்களிடை இதுபோன்ற முயற்சிகள் ஒரு சிறிதும் வேண்டற்பாலதன்று. வீட்டு வளர்ப்பு மிருகங்களான நாய், பூனை, மாடு, குதிரை முதலான இனங்களில் நோய் அணுகுமாயின் அவைகள் எவ்வித இரைகளையும் ஏற்காமல் கண்டிப்பாக அந்நோய் தீருமளவும் உபவாசமிருப்பது கண்கூடு. குட்டியிட்ட பூனை (லங்கணம்) பட்டினி கிடப்பதும் மூன்றாம் நாள் வெளிச்சென்று பசும்புல் முதலிய சில குறிப்பான இலையுணவையே யுட்கொண்டு மீண்டும் குட்டிகளிடம் காவலாக விருந்து வருவதும், கோழிகள் அடைகாப்பதில் காட்டும் சிரத்தையும் கவனிக்கத்தக்கன. குதிரைகள் எவ்வளவு கட்டாயப்படுத்தினாலும் குடல் சரிவர இல்லாவிடில் புல்லருந்துவதில்லை. இழிவாக நினைக்கும் நாய்கூட உடலில் மயிர் உதிர்ந்து பிணிநேரின் எவ்வித அருமையான உணவு இடப்படினும் கண்ணெடுத்துப் பாராமல் மரங்களின் நிழலிற் கிடப்பதைக் காணலாம். ஆனால் மனிதர் மட்டில்தான் அக்கினி மந்தம் இருக்கும்போதே ஒரு சிறு அல்வா துண்டாவது சாப்பிட்டு செரிக்க வேண்டி ஸோடாவைப் பருக விழைகின்றனர். அதிலும் முடியாவிடில் எனிமா வைத்துக்கொண்டாவது குடலைக் காலிசெய்துகொண்டு மேலே நாவுக்கினிய வஸ்துக்களைச் சாப்பிடத் தயங்குவதில்லை யென்பதை எவரும் அறிவர். தற்கால நடை முறைகளைக் கூர்ந்து நோக்குவோமாயின் மூதாட்டியார் நோய்க் கிடங்கொடேல் என் ஒருதரம் சொன்னது போதாது; ஓராயிரம் கூறினும் பொருந்தும் என்று தோன்றுகிறது.

அவபத்தியம் செய்யாதே என்று சொன்னால் அதற்குப் பதிலாக சுவையடக்க முடியாத சிலர் வாயைக்கட்டி வயிற்றைக்கட்டி எத்தனைநாள் கஷ்

டப்படுவது; வாய்க்கு வேண்டிய வஸ்துக்களை அவாவடங்க வுண்டு அதனுல் நோய் வளர்ந்து இறந்தால்தான் என்ன மோசம்? இப்படியெல்லாம் பத்தியம் பிடித்து வருந்தினுல் பிறகு மரணமே வரப்போகிறதில்லையா? இருந்து எந்த சமஸ்தானத்தை ஆளப்போகிறோம் என வேதாந்தம் பேசுவோரும் உண்டு. இத்திறத்தோர் மனதில் மனித தேக மெடுத்ததின் பயன் உண்பதும் உடுப்பதும் சுகிப்பதும்தான் என்கிற சித்தாந்தம் வேரூன்றி யிருக்கிறது. முற்றுந் துறந்த திருமூலர் உடம்பை வளர்த்தல் அவசியமென வற்புறுத்துகின்றனர். அழியாத ஆன்மலாபத்தைப்பெற மனித தேகமே உரியதாதலின் உயிர் ஓம்பி உடலைப் போஷிக்கவேண்டியது அறிஞர்களது தலையாய கடன். உடல் நோயின்றி தன்னிலையில் இருந்தாலன்றி எவ்வித முயற்சியும் செய்ய இயலாது. யோகம் ஞானம் என்னும் சொற்களுக்கே இடமில்லை. மனம்தான் எவ்விதம் தூய்மையும் அமைதியும் பெறும். சித்தர்கள் முதலில் காயத்தை அழியாத் தன்மையையுடைய தாக்கவே வழி கண்டனர். இதுபோன்ற அரிய பெரிய சாதனங்களுக்கு உடல்நலம் இன்றியமையாததாதலின் நாமகளின் அவதாரமாகிய நமது பெருமாட்டியார் நோய்க் கிடங்கொடேல் எனக் குறிப்பாக அறிவுறுத்தினுர் என்க.

இதையடுத்த நீதி "பழிப்பன பகரேல்" என்பது. இதற்கு அறிவுடையவர்களாலே இகழப்படுவனவாகிய சொற்களை நீ ஒருபோதும் பேசாதே என்பது பொருள். எப்போதும் பிறர்பால் பழிப்புக்கிடமான செய்திகள் அகப்படுமாவென ஆராய்வதில் திருப்தியுள்ளவர்களும் சிலரோ பலரோ உண்டென்பது திண்ணம். இதைக் குறிப்பாகக் கண்டிக்கவே வரகவி மாரிமுத்தாப் பிள்ளையவர்கள்,

"செய்யவர் பழிகேட்க வளைபோல் வளையுங்காது
சிவகதை கேட்கவென்றால் காதினுட் டுளையேது"

எனவும்,

"எய்தும் என்பழி நோக்க இரு கண்ணும் காமாலை
இதரர் பழிகள் நோக்க இந்திரன் கண்ணணைந்த மூலை"

எனவும், கீர்த்தனப் பகுதிகளில் அழகாக விவரித்துள்ளார். இக் குணத்தினுல் பழிப்பவன் அறிஞரால் பழிக்கப்படுகிறுன் என்பது தெளிவு. ஜயின மத அறிஞரும்,

"பிறர் மறையின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனுய்த் தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாதும்
அறங் கூறவேண்டா அவர்க்கு."

என்று மூன்று விஷயங்களைக் கூறினர். உலகில் எவரும் செவிடாகவும் குருடாகவும், ஊமையாகவும் இருக்க விரும்பார். வாழ்த்துவோரும் அவ்வாறு ஊமையாகுக, குருடாகுக, செவிடாகுக என்று கூறத்துணியார். நமது நாலடியார் மட்டில் செவிடாகவும் குருடாகவும் ஊமையாகவும் ஆகும்படி வற்புறுத்துகின்றுர்.

செவிகளின் பயன் அறிவுரைகளைக் கேட்பதற்கே யாதலின் அதற்கு மாறாகப் பிறர் தனிமையிற் பேசிக்கொள்ளும் இரகசியச் செய்திகளை ஒரு போதும் மறைந்திருந்து கேளாதே. அவ்விடத்தில் மனதைச் செல்லவிடாமல் செவிடனைப்போல் இருக்கும்படி கூறுகிறார். பிற மாதரைக் கண்ணெடுத்துப் பாராதே என்பதை வற்புறுத்தவேண்டி பிறர் மனைவியைக் காணும் விஷயத்தில் பிறவிக் குருடனைப்போல் மனதை அடக்கிநட வென்றுரைத்தார்.

பிறரைப்பற்றிப் பழிபடப் பேசுதலே புறங்கூற்றாகும். அப்படிப் பேச நேரின் ஊமையாகிவிடும்படி போதிக்கிறார். இதைத்தான் நமது தலைவியார் பழிப்பன பகரேல் என்றறிவுறுத்தினர். மேலே குறித்த மூத்திறத்திலும் தேர்ந்து விடின் வேறு எவ்வித அறமும் அவர்களுக்கு வேண்டுவதில்லை. இம்மூன்றிலிருந்தும் கிளைப்பவைகளே மற்றெல்லாத் தீமைகளும் என்பது ஆசிரியர் கருத்து. அவ்வித பெருங்கேட்டைத் தரும் மூன்றிலொன்றாகிய பழிப்பன பகரும் குணம் கடியப்படுதல் கடனாகும் என்பதை எவரு மறுக்கத்துணியார். புறங்கூறுதல் வேறு பழிப்பன பகர்தல் வேறு எனக் கருதக்கூடும். ஆனால் பழிப்பனவாகிய இழி சொற்களை எவரும் ஒருவர் முகத்தின்முன் பேசுதல் வழக்கன்று. தலைமறைவிலேயே பேசுவதியல்பு. நேர்நின்று பேசுதல் வீரர்களின் குணம். அது பெருமை யுடைத்தாம். அவ்வாறின்றிப் பழித்துரையாடுதலையே கண்டு மூதியார் தடுத்துள்ளார்.

"உண்டுகுண மிங்கொருவர்க் கெனினுங் கீழ்க்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும் பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி"

என்றருளியபடி தன்பழி நோக்காதவர்களே பிறர் பழிகளை நாடிப் புகல்வதில் மனதைச் செலுத்துவர். தெய்வப்புலவரும்,

"ஏதிலார் குற்றம் போற் றன்குற்றம் நோக்கிற் பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு"

என்றருளினர். பிறரைப் பழிப்பதே பெருங் குற்றமாக அறிஞர் கொள்ளுவதால் வேறு பிற குற்றங்கள் கூடவேண்டுவதன்று. ஆதலினால் அறிவுடையோர் இழிவாகக் கருதும் பழிச்சொற்களை ஒருபோதும் நாவடக்கமின்றிச் சொல்லாமல் அமைதியாக நடந்து கொள்ளலே மக்கள் கடமையாகும். இதுபற்றியே,

"பிறன்பழி கூறுவான் தன் பழியுள்ளும்
திறன் தெரிந்து கூறப்படும்"

என்றார். பழிப்பனவாகிய சொற்கள் பொய், குறளை அல்லது கோள், கடுஞ்சொல், பயனில்சொல் என நான்கு வகைப்படும் என விவரித்தனர் தொன்னூற்புலவர். இந்நான்கினையும் தனித்தனி அதிகாரங்களாக வகுத்துரைத்தனர் திருக்குற ளாசிரியரும்.

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" எனவும்

" இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய் கவர்ந்தற்று " எனவும்

" நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று " எனவும்

" கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதும்
உண்பது மின்றிக் கெடும் "

எனவும் வரும் முதுமொழிகளே பொறாமையாலெழும் கோள் சொல்லாதவர்களே எல்லா நலமும் பெறுவார்க ளென்பதற்கு ஔவையார் பிறிதோர்கால்

"நீரு நிழலும் நிலம் பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெரு வாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்ச மிலார்க்கென்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான்."

என்றருளி யுள்ளார்.

இனி "பாம்பொடு பழகேல்" என்னும் நீதி. இதற்கு பாம்புகளோடு பழகாதே என்று பொரு ளன்று—பால் கொடுத்தவருக்கும் விஷத்தைக் கொடுக்கிற பாம்பைப் போல்பவருடனே நீ சகவாசம் செய்யாதே என்பதே பொருள். இதற்குதாரணமாக எண்ணிறந்த சம்பவங்கள் நம் நாட்டில் நடைபெறுகின்றன—தமது எண்ணம் கைகூடுமளவும் உண்மை நண்பர்போல் நடித்து நம்பினவர்களை மோசம்செய்து நழுவும் துன்மார்க்கர்களுடன் இணங்காதே யென்று அறிவுறுத்துகின்றார். இது குறித்தே "நல்லிணக்கமல்ல, தல்லற்படுத்தும்" என்றெழுந்ததும்—ஒருவரிடம் நெருங்கிப் பழகுவதற்கு முன்பு அவர் செயல் குணம் எத்தகையதென நன்கு தெரிந்து கொள்ளல் அவசியம். இது பற்றியே,

"தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்"

என்றருளிச் செய்தனர் திருக்குற ளாசிரியரும்.

வஞ்சிப்பத்தனை உண்மையாளனென நம்பியதா லன்றோ கோவலன் உயிரிழந்தான்; அரசனும் பொன்றினன். ஆட்சிகுலைந்து நாடழிந்தது.

" ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும் "

என்பது பொய்க்குமோ! தட்சகனாகிய பாம்பு வேதியன் வடிவமெடுத்து பரிட்சித்து மகாராஜனாகிய சந்திர குலதிலகனின் உயிர் கவர்ந்தது. இந்த இரக்கமற்ற கொடுஞ்செயல் செய்தது ஒரு கொடிய பாம்பேயாகும். அப்பாம்பின் குணமேயுடைய துரோகிகள் பலர் மக்கள் வரிசையில் இடம் பெற்றிருக்கின்றனர். தற்காலம் பேதைமாந்தரின் பொருள் கவர எண்ணி வெளிவரும் மந்திரவாதிகள் எத்தனைபேர்? போலித்துறவி வேடதாரிகள் எத்தனை எத்தனை? ஆதல்பற்றியே,

"குடிமையும் உயர்ந்த குடிப்பிறப்பும் குன்றா வினனும் குறையாத சுற்றத் தாரையுங்கூட விசாரித்தறிந்த பின்பே நட்டல் வேண்டு"மென்று உரைக்கப் பட்டுளது. பாம்பு உயிர் ஒன்றையே கவரும். பாம்பின் குணமுடைய வஞ்ச நெஞ்சக் கொடியரால் பொருளும் மானமும் உயிரும் ஆகிய யாவும் கெட் டொழிதலால் பாம்பினும் இவர் கொடியர் என்றுணரப்படும். இவர்களுக்கு உதாரணமாக பண்டைக்கால சரிதங்களிலிருந்தும் உதாரணம் காட்ட முயன் றால் மிகச் சிலவே அகப்படும். ஆனால் தற்கால நீதி மன்றங்களில் வேண்டுமா யின் ஆயிரம் ஆயிரமாக உதாரணம் காட்ட முடியும். இந்த அபிவிர்த் திக்காகத் தற்கால நிலைக்கு யோக்கியதா பத்திரம் கொடுக்கலாம். சமீபத்தில் நடந்த வடநாட்டு கும்பமேளா தினத்தில் இகலோக வாழ்வைத் துறந்தவர் களாய் விஜயம் செய்த சாதுக்களில் நூற்றுக்கணக்கான அசாதுக்கள் போலீ ஸாரால் கண்டுபிடிக்கப் பட்டதாகப் பத்திரிகைச் செய்திகளால் அறிந்தோம். இப்பாதகவ முழூட்சுக்களைவிடப் பாம்பு மேலானதே. தன்பால் உள்ள கொடு ங்குணத்தை யெண்ணி எப்போதும் அது அஞ்சி யொதுங்கியே வளைகளிலும் புதர்களிலும் வசிக்கின்றது. களங்கமில்லாது எவரும் நம்பிப்பணிந்து மரியாதை செலுத்தத்தக்க துறவிவேடம் புனைந்து ஈச்வரநாமங்களை யுச்சரித்துக்கொண்டு ஜன சமூகத்தினிடை கம்பீரமாக நடமாடும் இவ்வஞ்சர்கள் கோடி மடங்கு கொடியவர்கள். இத்தகையர்களுக்கு ஓர் நல்ல உதாரணமாகத்தானே தசக்கிரீ வனுகிய இராவணனும் சந்நியாஸி வேடம் பூண்டதாக முன்னோர் பொறித்து வைத்தனரோ? வென்றும் எண்ணவேண்டி யிருக்கிறது. உண்மைச்சாதுக் களுக்கு இவர்கள் செயல் மனவருத்தத்தையே விளைவிக்கு மென்பது தெரிந் ததே. இவர்களைவிட இல்லறம் முறைப்படி புரிபவன் பன்மடங்கு போற்றத் தக்கவன் என்பதில் ஐயமுண்டோ!

இவ்வளவு ஊழலும் அடிப்படையான கல்வி, ஒழுக்கம், செயல் முதலி யன உரியோரால் கவனிக்கப்படாமல் அலட்சியம் செய்யப்படுவதுதான். உறு தியும் கண்டிப்பும், உலக அநுபவமும், மேன்மையான நடையும் உள்ள ஆசிரி யர்களின் கீழ் கல்விகற்க நேரும் பாக்கியமுள்ள இளைஞர் தாங்கள் பெரிய வர்க ளாகுங்கால் குற்றமற்ற குணசீலர்களாகவே திகழ்வர் என்பதில் சந்தேக மில்லை.

பாம்பைப்போல் நன்மை செய்தவர்க்கும் தீங்கையே செய்யும் தீயருடன் ஆராயாமல் பழகாமல் இருப்பதுடன் அத்தகைய கொடிய குணத்திற்குத் தாங்களும் ஆட்படாது களங்கமின்றி நேர்மையா யொழுக முயலவேண்டுவது கடனாகும். இதற்கு மாறாக இன்னா செய்தார்க்கும் தீங்குசெய்ய நினையாதிருத் தல் பின்னும் சிறப்புடைத்தாகும்.



# "மணிமேகலை" ஆராய்ச்சி

ஸ்ரீ R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.


## 3. சரித்திரப் பகுதி

### 9. சேரநாடும் வஞ்சியும்

சேரநாட்டைக் குறித்தும் அதன் தலைநகராக அக்காலத்தில் விளங்கி இருந்த வஞ்சியைப்பற்றியும் "மணிமேகலை'யில் பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. சேரநாட்டின் எல்லைகளை,

"வடக்குத்திசை பழனிவான் கீழ் தென்காசி
குடக்குத்திசை கோழிக்கூடம்—கடற்கரையி
னோரமே தெற்காகு மூள்ளொன்பதின் காதம்
சேரநாட்டுக் கெல்லையெனச் செப்பு.",

என்ற வெண்பாவால் அறியலாம். அக்காலத்தில் சேரநாடு, பூழிநாடு, குடநாடு, குட்டநாடு, வேந்நாடு, கல்நாடு என்ற ஐந்து பிரிவினதாக இருந்த தென்பா. பூழிநாடு, மணல் அதிகமாக உள்ள வடமலையான தேச மென்பர். குடநாடு தென்மலையான தேசமாம். குட்டநாடு கொச்சிப்பிரதேசம். கல்நாடு நீலகிரியின் அடியிலுள்ள பாலக் காடும் ஆனைமலையு மாகு மென்பர்.

மேற்கூறிய வஞ்சிக்குக் கருவூரென்றும் பெயர் வழங்கி வந்தது. இதனைத் திருச்சி ஜில்லாவைச் சார்ந்துள்ளதும், அமராவதிக் கரையிலுள்ளது மான கரூரென்பர் சிலர். வேறு சிலர், திருவஞ்சைக்களமென்பதே வஞ்சியா மென்பர். மற்றுஞ் சிலரோ பேரியாற்றங் கரையிலுள்ள திருக்கரூரென்பா. திருவஞ்சைக் களத்தையே உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் குறிக்கின்றனர். (சில. பதிக உரை. 3) இளங்கோவடிகள் வஞ்சி நகரின் கீழ்த்திசையிலுள்ள குணவாயிலென்னு மூரில் கோயிலொன்றில் வசித்து வந்ததாகக் கூறப்படுகின்றனர். அக் குணவாயி லென்பது யாதென்பதை அறிந்திடல் சேரநது நகரம் மேற்கூறிய மூன்றினில் எதுவென்பது விளங்கும். கருவூரென்பது ஆன் பொருநையாற்றின் கரையில் விளங்கியதொரு பட்டணமாக அகநானூறும் (93) புறநானூறும் (11, 387) சிலப்பதிகாரமும் (29) கூறுவது காண்க. இங்கு வஞ்சி யென்பது எதனைக் குறிப்பதென்பது நன்கு விளங்கவில்லை. சரித்திர ஆராய்ச்சியாளர்களால் இது விளக்கப்படல் வேண்டும்.

(வஞ்சிமா நகரின் புகழ்ச்சி)

கந்திற்பாவை, "வஞ்சிமாநகர் புகுவை" யென (21: 91) வருவ துரைத்த படியும், கண்ணகி தெய்வம், 'இளையளோ டன்றி வளையணிந்த பெண்ணுகவு மிருத்தலி னெவரும் விளைபொருளுரையா' ராகலின் வேற்றுருக்கொண்டு "பல்வேறு சமயப் படிற்றுரையெல்லாம்" பாங்குடன் கேட்டிடுகவெனக் கூறி யாங்கு, மணிமேகலை,

"மையறு சிறப்பிற் றெய்வதந் தந்த
மந்திர மோதியோர் மாதவன் வடிவாய்."

அப் "பொன்னகர்ப் பொலிந்தனள்" எனக் கூறினும், பொருள் தெளிவாக விளங்கி இருக்குமாயினும் செங்குட்டுவன் தமக்கு இருந்த அபிமானம் பற்றியோ; சிறப்புற்ற அரசனின் தலைநகர மென்றதாலோ; இளங்கோவடிக ளிடத்திருந்த நேசத்தின் காரணத்தாலோ; அல்லது மூத்தமிழ் வேந்தரின் நாட்டையும் ஒரு நிகராகப் புகழு மாசையாலோ; அன்றி மிகவும் உன்னதமான பதவியுற்று விளங்கி யிருந்தும், மிக்க பல சமயவாதிகளைக் கொண்டிருந்தும், அச் சமயங்க ளனைத்தும் மணிமேகலையால் மெய்யற்றனவென்று விலக்கப் பட்டமையின், சிறந்த வப்பதியி னிழிவைக் குறிப்பாக நன்கு விளக்கிடவோ, யாதுபற்றியோ வேண்டா திருக்கவும், ஆசிரியர் சாத்தனுர் அந் நாட்டினைப் பற்றி வெகு விரிவாகவும், அதன் மன்னனது மாண்மைச் சாலவும் உயர்த்தி யும் கூறி யுள்ளனர்.

இந் நகரின் சிறப்பை ஆசிரியர், மணிமேகலை இதனகத்துப் புகுந்தன ளென்று கூறிய சமயத்தும், மீட்டுமதனை விட்டு வெளிப்போந்தனளென்று கூறியுள்ள அமயத்துமாக இரு முறையுங் குறித்துள்ளனர். சாத்தனுர், வஞ்சிமாநகரை அவ்வமயத்து ஆண்டுவந்த சேரன் செங்குட்டுவனது, உற்றதொரு நண்பர், அவனால் நன்கு மதிக்கப்பட்ட கண்ணகிக்குற்ற கடுந் துயரையும், மதுரை யடைந்த கேட்டையும் நேரிற் கண்டவாறு அச் சேரனிடம் கூறிய வர். ஆகலின் ஆசிரியர் அக்காலத்திலிருந்தபடியே அம் மன்னனது நாட்டைச் சிறப்பாகக் கூறியுள்ளன ரென்றே கொள்ளவேண்டும். பண்டைத் தமிழ் நூற்களிலும் வஞ்சி மிகவும் உயர்வாகவே கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத் தில் இப் பதியை "பூவாவஞ்சி" (26: 50) "வாடாவஞ்சி" (28: 180) "கோநகர்" (27: 255) எனக் கூறப்படுதல் காண்க.

(நகரின் வனப்பு)

வஞ்சியம்பதியைப் பல வகையிலும் மேன்மையுறச் செய்தனவற்றை, ஆசிரியர் மணிமேகலையில் பரக்கக் கூறியுள்ளனர். அந்நாட்டில் தேவர் களின் கோயிற்களும், பொய்கைகளும் எங்கும் நிறைந்திருந்தன. நற்றவ முனிவர்களும், கற்றுணர்ந்த பெரியோர்களும், தொன்னூற் புலவர்களும் எங்கும் உறைந்திருந்தனர். (26=72-6) நீர்வளம், நிலவளம் கொண்ட அந் நாட்டில் சுருங்கைத் தூம்பின் வாயிலாக நகரெங்கும் நீர்பாய்ச்சி வந்தனர். (காதை. 28) ஆசிரியர் வஞ்சியின் கோட்டை யழகையும், அதனைக் காத்து வந்த வீரரின் தீரத்தையும் வெகு அழகாக மொழிந்துள்ளனர். நான்கு வகை யின் பாற்பட்ட வீரரும் பிறரும் புறநகரில் வசித்திருந்தனர். உழிஞைமாலை

யைச் சூடி அரணைப் படைவீரர்கள் பாதுகாத்து வந்தனர். (28: 2-4) உயர்ச்சியும், பருமனும், வலிமையும் கொண்டதாய்க் கற்களால் கட்டப்பட்ட மாண்புடைய மதிற்சுவர்கள் அரணைச் சுற்றி யிருந்தன.

(நகரின் தெருக்கள்)

இங்ஙன மோங்கி வானளாவி நின்ற மதிலி னிடையில் பூக்கள் நிறைந்த கொடிமிடை வாயில் பல பொலிந்து விளங்கின. காவற்காரர்கள் எங்கும் தங்கித் தமது கடமைகளை முறைபிறழாது விதித்தன விதித்தாங்கு ஒழுங்குபடச் செய்து வந்தனர். நகரின் உட்புறத்தில் பல தெருக்கள் இருந்தன. மீன், உப்பு, கள், பிட்டு, அப்பம் முதலியன விற்பவர்களும்; ஆட்டு வர்த்தகர், பாசவர், பஞ்சவாசம் விற்பவர் ஆகிய இவர்கள் வசிக்கும் தெருக்கள் ஒரு புறமாக இருந்தன. குயவர், செம்பு, வெண்கலம் முதலியன செய்வோர்; பொற்பணியாளர்; உருக்குத் தட்டர், மரங்கொல் தச்சர், மண்ணீட்டாளர், ஓவியக்காரர், தோல் விற்போர், தையற்காரர், மாலைக்காரர், சோதிட நூலோர், இசைக்காரர் முதலிய இத் திறத்தினோர் தங்களின் தொழிற்களைச் செய்து கொண்டு இன்புற்றுறைந்திருந்த தெருக்கள் மற்றொரு புறமாக இருந்தன. விலங்கரம் (வாளரம்) செய்வோர், வளை போழ்நர் (சங்கறுப்போர்), மணி கோப்போராகிய இவர்கள் வாழ்ந்து வந்த தெருக்கள் பிறிதொரு புறத்தே விளங்கி யிருந்தன. மற்றும் கூத்தியர் மறுகும், கூலமறுகும் (இருந்தேத்துவோராகிய) மாகதர், (நின்றேத்துவோராகிய) சூதர், (பலதிறப்பட்ட தாளத்திலாடுவோராகிய) வேதாளிகர், முதலிய இத்திறத்தினராகிய இசைப்பிரியர்கள் ஒருபுற மிருந்தனர். இவற்றோடன்றி "போகம் புரக்கும் பொதுவர் பொலி மறுகும்," "நுண்ணூற் கைவினைவண்ண வறுவையரின் (உடை நெய்வோரின்) வளந்திகழ் மறுகும்", "பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்," "பன்மணி பகர்வோரின் மன்னிய மறுகும்" அந்தணர் வீதியும், அரசர் பெருந்தெருவும், அமைச்சரின் வீதிகளும், புதுக்கோள் யானையையும் பொற்றேர்ப் புரவியையும் பயிற்சிப்போரின் கவின்பெறு வீதியுமாகப் பலவகையான வீதிகளும் நாற்புறமும் நகரெங்கும் விளங்கின, தெருக்களோ டன்றி, மன்றமும், பொதியிலும், சந்தியும், சதுக்கமும், குன்றங்களும், அறச்சாலைகளும், கூடங்களும், கோலங்குயின்ற கொள்கை யிடங்களுமாகிய இவையும் காணப்பட்டன.

(வஞ்சியும் சாத்தனும்)

இங்ஙனமாக வஞ்சிமாநகரைச் சாத்தனார் அதிகமாகப் புகழ்ந்து கூறியுள்ளதை நோக்குங்கால், அக் காலத்தில் அது சாலவும் சிறந்து எழில் வாய்ந்து விளங்கிய நகரங்களி லொன்றாக விளங்கி யிருத்தல் வேண்டுமென்பது கூறாமல் விளங்கும். மீட்டும் கூறுமிடத்து, சாத்தனார், தம் காலத்திலிருந்த தமிழ்நாட்டு அரசர்கள் மூவரி லொருவனும், புகழுக்குப் பாத்திரனாக விளங்கியவனும், தம்மிடம் நட்புப் பூண்டொழுகியவனும், மேன்மையொடு நாடாண்டு வந்தவனுமாகிய சேரன் செங்குட்டுவனது தலைநகரைப் புகழ்ந்து கூறி யுள்ளனர். இவரது நட்பாளராகிய இளங்கோவடிகள், தமது நூலாகிய சிலப்பதிகாரத்தில், பூம்புகாரை வெகு அழகாக அதன் வனப்புகள் தோன்றுமாறு மேன்மைப்படுத்திக் கூறியுள்ளனர். எனவே சிலப்பதிகாரத்தில் மூக்

தியமாக விளங்கிய காஞ்சிநகரை மணிமேகலை ஆசிரியரும், மணிமேகலையில் முக்கியமாக விளங்கிய புகாரை சிலப்பதிகார ஆசிரியருமாக நண்பரிருவரும், இரு தலை நகரங்களையும் உயர்த்திக் கூறியுள்ள செம்மை நோக்கி மகிழவேண்டியுள்ளது. ஆயின் இரு பெரும் புலவரும் தாம் நேரிற் கண்டனவும், தம் காலத்தனவுமாகிய விஷயங்களையே வரிவடிவாக்கித் தத்தமது நூற்களிற் பொதித்து வைத்து இருக்கின்றன ரென்றே கருத வேண்டியது. புகழ்ச்சியாக, இல்லாதனவற்றைக் கூறி இருப்பரென்பது இழுக்குடையதாகும். வஞ்சியைப்பற்றிய பிற விஷயங்களில், அதன் அரண்மனையின் மாண்பும் (28: 46-50); அங்குள்ள பல மண்டபங்களின் சிறப்பும் (25: 4); வேற்றரசர்கள் தங்குதற்குப் பயன்பட்டு வந்த மாளிகையின் அமைப்பும் (28: 198); திருமாலின் ஆலயமாக விளங்கிய "ஆடகமாட" மென்ற பெயர் பெற்ற கோவிலின் பெருமையும் (26: 32; 30-51), சிலப்பதிகாரத்தில் காண்க.

## (சேரலன்)

சேர அரசர்களது சரித்திரங்களைப்பற்றிய விஷயங்கள் பல, பதிற்றுப் பத்து, புறநானூறு, சிலப்பதிகாரம் முதலிய நூற்களில் அறிந்திடலாம். இவற்றுள் பதிற்றுப்பத்து நூல் முழுவதும் சேரர்களைப்பற்றியே கூறுவதாக அமைந்துள்ளது. மணிமேகலையில் சேரலனைப்பற்றிச் சில செய்திகள் கூறப்பட்டுள்ளன. இந்நூலில் அம்மன்னன், குட்டுவர் பெருந்தகை; விடர்ச்சிலை பொறித்த வேந்தன்; குடக்கோச் சேரலன்: என்று உயர்த்திக் கூறப்பட்டுள்ளனன். "குட்டுவர் பெருந்தகை' யென்றும், "குடக்கோச் சேரலன்" எனவும் வந்துள்ள அடிகளை நோக்குமிடத்து, இவ்வரசனை ஒரு சிற்றரசனாகவே கருதவேண்டியுள்ளது. குடா, குட்டமென்பன கொடுந் தமிழ்நாடுகளைக் குறிப்பனவாகும். இச் சேரலனுக்கு மனைவியர் பலருண்டு. இலங்கையினின்று வந்த தருமசாரணரால் இவன் உண்மைத் தத்துவப்பொருளை யுணர்ந்தவன். (மணி. காதை. 28.)

(தொடரும்.)



# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

(சென்ற மாதத் தொடர்ச்சி.)

## தேவீ மஹாத்மியம்

### மூன்றாவது அத்தியாயம்.

மஹரிஷி சொல்லுவது:—

(1-10)

அந்த சேனைகளைக் கொல்லுவதைப் பார்த்து, சேனாதிபதியான சிக்ஷுர மஹாஸுரன் அம்பிகையோடு யுத்தம் செய்ய வந்தான். மேகம், மஹாமேரு மலையின் சிகரத்தின் மீது மழை பெய்வது போல, யுத்தத்தில் அந்த அஸுரன் தேவியின் மேல் சரவர்ஷம் பொழிந்தான். தேவியோ, அவனுடைய சரக் கூட்டத்தைச் சாதாரண விளையாட்டாக அம்புகளைக் கொண்டு முறித்து விட்டாள்; குதிரைகளையும் குதிரைக்காரர்களையும் கொன்று விட்டாள். வில்லையும், அதிக உயரமுள்ள கொடி மரத்தையும் முறித்தாள். வில் முறிந்துபோன அவனை அம்புகளால் ஸர்வாங்கமும் எய்தாள். வில் முறிந்து தேர் முறிந்து குதிரையும் ஸூதனுமில்லாத அந்த அஸுரன், வாளும் சர்மமும் எடுத்துக் கொண்டு தேவிக்கு நேராகச் சென்றான். அதிக பலமுள்ள அவன் கூரான வாளினால் சிங்கத்தின் தலையையும் தேவியின் இடது கையையும் லக்ஷியமாக ஒவ்வொரு வெட்டு வெட்டினான். ராஜாவே! வாள் தேவியின் கையில் பட்டதும் பொடியாயிற்று. அதனால் அதிக கோபமடைந்து கண்கள் சிவந்தன. அவன் ஒரு சூல மெடுத்தான். பிறகு ஆகாசத்தில் சூரிய பிம்பம் போல பிரகாசிக்கின்ற அதை மஹாஸுரன் பத்திரகாளிக்கு நேராக விட்டான். அந்த சூலம் வருவதைப் பார்த்த தேவி, தன் சூலத்தை விட்டாள். அது அந்த சூலத்தையும் அந்த அஸுரனையும் நூறு நூறு துண்டாக்கிற்று. மஹா வீரியவானான அந்த மஹிஷ சேனா நாயகன் கொல்லப் பட்டவுடன், சாமரன் என்ற அஸுரன் யானை மீது ஏறிக்கொண்டு வந்தான்.

(11-20)

அவ்ன் தேவியின் மீது வேலாயுதத்தை விட்டான். அதை அம்பிகை க்ஷணத்தில் ஒரு ஹும் என்ற சப்தத்தால் கீழே தள்ளிவிட்டாள். வேல் ஒடிந்து கீழே விழுந்ததைப் பார்த்து அதிக கோபம் கொண்ட சாமரன் சூலத்தை விட்டான். அதையும் தேவி அம்புகளினால் முறித்து விட்டாள். உடனே சிங்கம் யானையின் மஸ்தகத்தின் மீது குதித்து பாய்ந்து அங்கே வீற்

திருந்த அந்த அஸுரனோடு பாஹுயுத்தம் செய்தது. யுத்தத்தில் யானையின் மீதிருந்து கீழே குதித்து, பலமாக யுத்தம் செய்தார்கள். முடிவில் சிங்கம், மேலே ஒரு குதி குதித்து சாமரனுடைய தலைக்கு நேராக வந்து கையினால் ஒரு அடி அடித்து அவனுடைய தலையை உடலிலிருந்து பிரித்து விட்டது. உதக்ரனை தேவி, கல், மரம் முதலானவைகளால் கொன்றாள். காளனைக் கடித்தும் இடித்தும் கொன்று தள்ளினாள்—கதையைக் கொண்டு உத்ததனையும், கவண் கொண்டு பாஷ்களனையும், அம்புகளால் தாமிராந்தகர்களையும் பொடியாக்கி விட்டாள். உக்ராஸ்யன் உக்ரவீரியன், மஹாஹனு இவர்களை திரு நேத்திரையான தேவி திரிசூலம் கொண்டு கொன்றாள். பிடாலனுடைய தலையை வாளினால் வெட்டி உடலிலிருந்து வீழ்த்தினாள். துர்த்தரன் துர்முகன் இவர்களை அம்புகளினால் யமக்ஷயத்துக்கு அனுப்பினாள். இவ்வாறு தன் சேனை நாசமாவதைப் பார்த்த மஹிஷாஸுரன் மஹிஷரூப மெடுத்துக் கொண்டு தேவியின் கணங்களைப் பயப்படுத்தினான்.

(20-30)

சில கணங்களை முகத்தால் அடித்தும், வேறு சிலரை குளம்புகளால் மிதித்தும், இன்னும் சிலரை வாலினால் அடித்தும், மற்ற சிலரை கொம்புகளினால் பிளந்தும், சிலரை கர்ஜனையாலும் சிலரை பெருமூச்சின் சக்தியாலும் சிலரை தூக்கி ஆகாசத்தில் எறிந்தும் பூமியில் தள்ளினான். தேவியின் பிரமத கணங்களை இவ்வாறு கீழே தள்ளிக் கொன்று கொண்டே அவன் தேவியின் சிங்கத்தைக் கொல்வதற்காக ஓடினான்—அப்பொழுது அம்பிகைக்கு அதிக கோப முண்டாயிற்று. மஹாவீரியமுள்ள அஸுரன் தரையை தன் குளம்புகளால் கிழித்துக் கொண்டு, கொம்புகளால் பெரிய மலைகளின் உச்சிகளைப் பேர்த்து எடுத்து எறிந்து விட்டு கர்ஜித்தான். வேகமாக அவன் சுழற்றும் போது பூமி பொடிப் பொடியாயிற்று. வாலினால் அடிபட்டு கடல் பொங்கிற்று. கொம்புகளால் மேகங்கள் துண்டு துண்டுகளாயின. அவன் வெளிவிடும் காற்றினால் மலைகள் மேலே கிளம்பப் பொடியாகி கீழே வீழ்ந்தன. இப்படி கோபித்தோடு எதிர்த்து வருகின்ற அஸுரனைப் பார்த்து தேவி கயிற்றை எறிந்து மஹாதைத்யனைப் பிடித்து கட்டினாள். மஹாயுத்தத்தில் கட்டுப்பட்ட அவன், மஹிஷ ரூபத்தை விட்டு விட்டு ஒரு ஸிம்ஹ ரூபத்தை எடுத்துக்கொண்டான். உடனே அம்பிகை வாள் எடுத்து கழுத்தை வெட்ட ஆரம்பித்தாள். அப்பொழுது அவன் வாளும் கையுமாகவுள்ள ஒரு புருஷனாகக் காணப்பட்டான். உடனே தேவி பாணங்களால் அவனை வாள், சர்மம் இவைகளோடு கூடவே துண்டாக்கி விட்டாள். அப்பொழுது அவன் ஒரு பெரிய யானையாக மாறினான்.

(30-35.)

பிறகு, தேவியின் மஹா ஸிம்ஹத்தை தன் துதிக்கையால் பிடித்து இழுக்கவும்; கர்ஜிக்கவும் செய்தான். தேவி தன் வாளினால் அந்த தும்பிக்கையை முறித்து விட்டாள். உடனே மஹாதைத்யன் மறுபடியும் மஹிஷ ரூப மெடுத்தான். முன்போல மூன்று லோகங்களிலுள்ள ஸகல சராசரங்களையும் இளகும்படிச் செய்தான். அப்பொழுது கோபத்தோடு, மூன்று கண்களையும் சிவப்பாக்கிக்கொண்ட தேவியான சண்டிகை விசேஷமான மத்

யத்தை பானம் செய்துவிட்டு மறுபடியும் மறுபடியும் சிரித்தாள். பலம் வீரியம் ஆகிய கர்வத்தால் பைத்தியம் பிடித்த அந்த அஸுரன் கர்ஜித்துக் கொண்டு தன் கொம்புகளால் மலைகளை எடுத்து சண்டிகாதேவியின் நேராக எறிந்தான். அவனால் எறியப்பட்ட குன்றுகளை அம்பு எய்து தூளாக்கி சிதறின வார்த்தைகளோடும் மத்ய பானத்தால் துடித்த முகத்தோடும் தேவி அவனைப் பார்த்து சொல்லுகிறாள்.

தேவி சொல்லுவது:—(36)

ஹே மூடா! கொஞ்சநேரம் கத்து கர்ஜி. நான் மதுபானம் செய்கின்றேன். பிறகு வெகு சீக்கிரத்தில் நீ என்னால் கொல்லப்பட்டு, இங்கேயே தேவர்கள் கர்ஜிப்பார்கள்.

மஹரிஷி சொல்லுவது:—(36-41)

இப்படி கூறிவிட்டு, தேவி அந்த மஹாதைத்யன் மேல் குதித்து தன் கால்களால் அமர்த்திக்கொண்டு, கழுத்தைச் சூலத்தால் குத்தினாள். கால்களால் அமர்த்தப்பட்டு, தேவியின் வீரியத்தால் அசைய முடியாத அவனுடைய முகத்தின் ஒருபாதி வெளியே வந்தது. பாதி வெளியே வந்த அவன் தலையை, தேவி தன் பெரிய வாளினால் வெட்டிக் கீழே தள்ளினாள். பாக்கியுள்ள அஸுரர்கள் ஹா! ஹா! என்று சத்தம் போட்டுக்கொண்டு ஓடி ஒளிந்தார்கள். தேவகணங்கள் மிகவும் சந்தோஷ மடைந்தன. தேவர்கள் மஹரிஷிகளோடு கூட தேவியை ஸ்தோத்திரம் செய்தார்கள். கந்தர்வர்கள் பாட்டு பாடினார்கள். அப்ஸர ஸ்திரீகள் நர்த்தன மாடினார்கள்.

இது ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில், தேவி மாஹாத்மியத்தில் (3) மஹிஷாஸுர வதம் என்ற எண்பதாம் அத்தியாயம்.

## நான்காவது அத்தியாயம்

(1-25.)

(1) அதிவீரியவானான அந்த துஷ்டனையும் அஸுரப்படையையும் தேவி கொன்ற பிறகு மிகக் களிப்புடன் புளகாங்கிதரான இந்திராதிகளான தேவர்கள் தலைவணங்கி தேவியை துதித்தார்கள்.

(2) தன்னுடைய சக்தியினால் இந்த உலகத்தைச் சிருஷ்டி செய்து, ஜகதாம்பிகையாய், எல்லா தேவமஹரிஷி பூஜ்யையாய், எல்லா தேவர்களுடைய சக்தியோடு கூடின தேவியாகிய உன்னை எங்களுக்கு நன்மையை அளிப்பதற்காக பக்தியோடு கூட நமஸ்கரிக்கின்றோம்.

(3) தேவியுடைய மஹா மஹிமையையும், பலத்தையும் குறித்து யாருக்குத்தான் சொல்ல முடியும்! பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர்களாலும் கூட முடியாது. அந்த சண்டிகாதேவி, இந்த ஜகத்தைக் காப்பாற்றுவதற்கும், அசுபம் உண்டாகும் என்ற பயத்தை இல்லாமல் செய்வதற்கும் கருணை புரியட்டும்.

(4) புண்யாத்மாக்களுடைய வீட்டில் நீயே லக்ஷ்மியாகவும், பாபாத்மாக்களுடைய வீட்டில் நீயே அலக்ஷ்மியாகவும், புத்திமான்களுடைய ஹிரு

தயத்தில் நீயே புத்தியாகவும், சிஷ்டர்களுக்கு நீயே சிரத்தை, நல்லகுலத்தில் பிறந்தவர்களுக்கு நீயே லஜ்ஜை ஆகவும் இருக்கின்றாய். இந்த ஜகத்தைக் காப்பாற்றுக. நாங்கள் உன்னை நமஸ்கரிக்கின்றோம்.

(5) சிந்திக்க முடியாததான உன் ரூபத்தையும், அஸுரர்களை நாசம் செய்யக்கூடிய உன் சக்தியையும், யுத்தத்தில் உன்னுடைய சாமர்த்தியங்களையும், எல்லா தேவ, அஸுர கணங்களில் எவனால் வர்ணிக்க முடியும்.

(6) ஜகத்துக்கு திருகுண ஸ்வரூபமாகவும் பிரம்ம ருத்திர விஷ்ணுக்களாலும் அறிய முடியாதவளாகவும், ஸர்வாசிரயையாயும், இந்த பூமியிலுள்ள எல்லா வஸ்துக்களிலும் இருப்பவளாயும், ஆத்யையாயு முள்ளவள் நீயே.

(7) பிதிரு கணங்களெல்லாம் திருப்தி யடைவதற்காக ஜனங்களால் சொல்லப்படுகின்ற ஸ்வதை நீ. தேவர்களெல்லாம் எந்த மகங்களால் திருப்தி யடைவார்களோ அந்த ஸ்வாஹையும் நீயே.

(8) பரிசுத்தர்களாகவும் தபோதனர்களாகவும் உள்ள முனிவர்கள், ஜிதேந்திரத்தோடும், அதிதீவ்ர, விரதத்தோடும், அப்யசித்து வருகின்ற ஐசுவரிய பூரண பரமோத்தமயான வித்தையும் நீயே.

(9) நீசப்த ஸ்வரூபிணி, விமலமான ரிக், யஜுஸ், ஸங்கீதரம்ய பத பாடத்தோடு கூடின ஸாமம், இவைகளின் இருப்பிடமும் நீயே, உலகத்தோருக்கெல்லாம் கஷ்டத்தைப்போக்கி மங்களத்தைக் கொடுக்கும் வார்த்தையும் நீயே. ஹேபகவதி நீ திரிகுணாத்மகமாயு மிருக்கிறாய்.

(10) எல்லா நிகமங்களையும் அறிந்த மேதை, ஹே! துர்க்கே! ஸம்சாரக் கடலைத் தாண்டுவதற்கான ஓடம், சேர்க்கையற்றவள், மஹாவிஷ்ணுவின் வக்ஷஸ்தலத்தி லிருக்கும், மஹாலக்ஷ்மி, ஈசுவரனின் அருகில் வீற்றிருக்கும் கௌரி எல்லாம் நீயே.

(11) தங்கத்துக்கு சமானமாக ஜ்மலமாக ஜீவலிக்கின்ற பரிபூரண சந்திர பிம்பத்துக்கு துல்யமான உன்னுடைய மந்தஸ்மிதத்தோடு கூடின முகத்தை, மஹிஷாஸுரன் பார்த்து வெகு கஷ்டப்பட்டு பாகதியடைந்தது எவ்வளவு ஆச்சரியம்!

(12) ஹே தேவி! நீ கோபித்து, புருவத்தை சுளித்துக்கொண்டு பயங்கரமாய் காட்டுகின்ற சந்திரனுக்கு சமானமான ஒளியுள்ள உன்னுடைய முகத்தை பார்த்தவுடனேயே மஹிஷாஸுரன் தன்னுடைய பிராணனை விட்டானே! என்ன ஆச்சரியம்! நீ கோபித்து யமனைப்போலுள்ள பார்வையோடு கூட யிருந்தால் எவன்தான் பிழைத்திருக்கக்கூடும்!

(13) ஹே தேவி! நீ பிரஸாதித்தால் பல நன்மைகளைக் கொடுப்பாய்; கோபித்தால் குலநாசத்தை உண்டு பண்ணுவாய்; இப்பொழுது தான் இந்த விஷயம் தெரியவந்தது. தயாராகவந்த மஹிஷ ஸைந்யத்தை பூராகவும் உடனேயே ஸம்ஹாரித்து விட்டாயே!

(14) நீ யாரிடத்தில் கருணை வைக்கின்றனையோ, அவர்கள் தேசத்தின் அதிட்டிகளாகளாகவும், தனிகராகவும், யசஸ்விகளாகவும், ஆகின்றார்கள்! அவர்களுடைய பந்து வர்க்கங்களுக்கு ஒருநாளும் ஒரு குறைவும் கிடையாது;

அவர்கள் தன்யர்களே; அவர்களுடைய வேலையாட்கள், மனைவி, மக்கள் எல்லாரும் விநீதர்களே. அவர்களுக்கு க்ஷேமமும் உண்டாகும்.

(15) ஹே தேவி! நீ பிரஸாதத்தையானால், ஜனங்கள் நல்லொழுக்க முள்ளவர்களாகி, தர்மமான வழியே சென்று ஸ்வதர்ம நிரதராகி முடிவில் ஸ்வர்க்கத்தையே அடைகிறார்கள். மூன்று லோகங்களிலும் நீயே நற்கதியை கொடுப்பவள்.

(16) ஹே துர்க்கே! அவர்களுக்கு ஸ்மிருதிபயம் என்பது ஏது? ஸ்வஸ்தர்கள் ஸ்மரித்தால், நன்மதியைக் கொடுக்கின்றாய். நீயே தாரித்திரிய துக்க பயஹாரிணி; வேறு யாருக்கு, ஸர்வோபகாரம் என்ற விஷயத்தில் இவ்வளவு கருணை யுண்டாகும்.

(17) லோக க்ஷேமார்த்தமாக, ஹே தேவி! நீ இவர்களைக் கொன்றாய்! அப்படி நீ செய்யாதபக்ஷம் இவர்கள் வெகுகாலம் நரகத்தில் கிடக்க வேண்டியதான பாபங்களை இன்னும் செய்துகொண்டே யிருப்பார்கள். இவர்கள் வெகுகாலம் நரகத்தில் நடக்கவேண்டியதான பாபங்களை இன்னும் செய்து கொண்டே யிருப்பார்கள். இவர்கள் யுத்தத்தில் மரணத்தை யடைந்து ஸ்வர்க்கத்தை அடையவேண்டும் என்ற எண்ணத்தால்தான் இந்த சத்துருக்களை நீ கொன்றிருக்கவேண்டும். நிச்சயம்.

(18) உன்னுடைய பார்வையாலேயே உனக்கு அஸுரர்களை பஸ்மமாக்க முடியும். என்றாலும், சத்துருக்களின்மீது நீ அஸ்திரப் பிரயோகம் செய்கின்றாய். சத்துருக்களும் அஸ்திர விசுத்தராக நல்ல லோகங்களை அடைய வேண்டியது என்ற நல்ல எண்ணத்தை சத்துருக்களிடத்திலும் நீ வைத்திருக்கிறாய்.

(19) அஸுரர்களுக்கு உன்னுடைய வாளின் ஒளியாகின்ற மின்னலாலும், அதி உக்ரமான சூலத்தின் முனையினுடைய பிரகாசக் கூட்டத்தாலும், கண் போகாதது ஏனென்றால் பிரகாசிக்கின்ற சந்திரகலையை யொத்த உன் திருமுகத்தை அவர்கள் கண்டதேயாகும்.

(20) ஹே தேவி! கெட்டவர்களை அழிப்பதே உன்னுடைய ஸ்வபாவம். ஸமானமில்லாத உன் உருவம் சிந்திக்க முடியாதது. அஸுரர்களைக் கொல்வதற்குள்ள சக்தி வாய்ந்தது. அப்படியானாலும், இப்படிப்பட்ட தயவு சத்துருக்களிடத்திலும் நீ காண்பித்திருக்கிறாய்.

(21) ஹே தேவி! த்ரைலோக்யவரதே! இப்பேர்ப்பட்ட உன் பராக்கிரம குணத்திற்கு ஸமானம் எங்கே யிருக்கிறது? இப்பேர்ப்பட்ட சத்துருக்களுக்கு பயத்தைக் கொடுக்கக்கூடிய ரூபம் எங்கே யிருக்கிறது? உன்னிடத்தில்தான் யுத்த விஷயத்தில் காடின்யம், அந்தரங்கத்தின் காருண்யம் என்ற இரு குணங்களும் காணப்படுகின்றன.

(22) சத்துரு சம்ஹாரத்தால் இந்த திரி புவனங்களையும் ரக்ஷித்தாய். சத்துருக்களையும் யுத்தத்தில் வதம்செய்து ஸ்வர்க்கத்துக்கு அனுப்பினாய். மஹாமதம்பிடித்த அஸுரர்களிடத்தி லிருந்து எங்களுக்கு உண்டான பயத்தையும் நீக்கினாய். ஹே தேவி உனக்கு நமஸ்காரம்.

(23) ஹே தேவி! எங்களை உன் சூலத்தாலும், வாளினாலும், உன் மணி நாதத்தாலும், வில் நாதத்தாலும் காப்பாற்றுக.

(24) ஹே சண்டிகே! ஹே ஈசுவரி! நீ உன் சூலத்தை சுற்றிக்கொண்டு என்னுடைய கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய நான்கு பக்கங்களிலும் இருந்துகொண்டு என்னைக் காப்பாற்றுக.

(25) அதிகப் பிரஸன்னங்களாகவும், அதிக கோரங்களாவும், இந்த மூவுலகிலும் இருக்கின்ற உன் மூர்த்திகளைக்கொண்டு எங்களைக் காப்பாற்றுக.

(26) பல்லவத்தைக் காட்டிலும் மிருதுவான உன் கைகளிலிருக்கின்ற வாள், சூலம், கதை முதலிய அழகான சஸ்திரங்களைக்கொண்டு, ஹே அம்பிகே! நீ எங்களைக் காப்பாயாக.

மஹரிஷி சொல்வது:—(27—28)

இவ்வாறு துதிசெய்து, தேவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து, நந்தன வனத்திலிருந்து கொண்டுவரப்பட்ட திவ்ய புஷ்பங்களாலும், சந்தனங்களாலும் தேவியைப் பூஜித்தார்கள். எல்லா தேவர்களாலும் பக்தியுடனும், திவ்ய தூபங்கள் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்ட ஜகன்மாதா, பிரஸாதமுள்ள முகத்தோடுகூட, வணங்கிக்கொண்டு நிற்கின்ற தேவர்களுடன் சொன்னாள்.

தேவி சொல்வது:—(29)

ஹே தேவர்களே! உங்களுக்கு வேண்டிய வரங்களை என்னிடமிருந்து பெற்றுக் கொள்ளுங்கள்.

தேவர்கள் சொல்லுவது:—(30—32)

எல்லாம் தாங்களே செய்து முடித்துவிட்டீர்கள். இனி ஒன்றுமே பாக்கியில்லை. எங்கள் சத்துருவான மஹிஷாஸுரனையும் கொன்று விட்டீர்கள். ஹே மஹேசுவரி! எங்களுக்கு வரம் கொடுப்பதாக இருந்தால், நாங்கள் ஸ்மரித்த மாத்திரத்திலேயே எங்களுடைய பெரிய ஆபத்துக்களையெல்லாம் நசிப்பிப்பாயாக. ஹே பிரஸன்னையான அம்பிகே! நீ எங்களை அனுக்கிரகிக்கும்பக்ஷம், இந்த ஸ்தலங்களைக்கொண்டு உன்னை எவன் ஸ்துதி செய்கிறானோ அவனுக்கு எப்பொழுதும் ஸர்வ ஸம்பத்தும், தனம், புத்திரமித்திர களத்திராதிவைபவங்களும் உண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும்.

மஹரிஷி சொல்லுவது:—(33—36)

ஹே ராஜாவே! இப்படி லோகலோக க்ஷேமத்திற்காகவும், தங்களுக்காகவும் தேவர்களால் பிரஸாதிக்கப்பட்ட பத்ரகாளி, 'அப்படியே யாகட்டும்' என்று கூறிவிட்டு அந்தரத்தானமானாள். இப்படி அந்த தேவி மூன்று லோகங்களுக்கும் நன்மைக்காக தேவர்களின் சரீரத்திலிருந்து அவதரித்த விதத்தை நான் சொன்னேன். திரும்பவும் தேவோபகாரிணியான அந்த தேவி, துஷ்ட அசுரர்களான ஸும்ப; நிஸும்பர்களைக் கொன்று லோகத்தை ரக்ஷிப்பதற்காக கௌரியின் தேஹத்திலிருந்து அவதரித்தாள். அதையும் நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். அதை சரியாகக் கேட்பீராக.

இது ஸ்ரீ மார்க்கண்டேய புராணத்தில் தேவி மஹாத்மியத்தில் (4) சக்ரா (இந்திரா)தி ஸ்துதி என்ற எண்பத்தொன்றும் அத்தியாயம்.

# வேதாந்த சாஸ்திரார்த்த வாக்கியாமிர்தம் 400

(ஆசிரியர்-கோ, வடிவேலு செட்டியார்.)

1. கல்வி—கேள்வி—அறிவு—ஒழுக்க முடையவரை யடுத்து அவர் கூறியவாறு நடப்பவர்க்கு இம்மையிலும் மறுமையிலும் "இது கிடைக்க வில்லையே" என்னும் ஏக்கத்தால் வருந்துவது சிறிது மில்லையாம்.

2. பொருள் தேடுதல்—போகத்தை யநுபவித்தல் என்பவற்றைப் பயிற்சி செய்யும் முயற்சி காலக் கிரமத்தில் எவர்க்குந் துன்பத்தையே தருவதாம்; ஆனால், அல்லல் வாழ்க்கையி னின்றும் நீங்கி ஆநந்த வாழ்க்கையைப் பெறச் செய்யும் முயற்சியே எவர்க்கும் இன்பத்தைத் தருவதாம்.

3. ஞானிகளது நட்பு ஒருவர்க்குக் கிடைப்பது மிகமிக அருமையாம்; அது கிடைத்து விடுமாயின், அவர் நம்மனோர் நாவாயில் (கப்பலில்) கடலைக் கடந்து விடுவது போல, அந்நட்பால் பிறவிக்கடலைக் கடந்து விடுதற்குரியாராவர்.

4. இப்பி கருப்பங் கொள்ளுமாயின், அஃது அதனது நாசத்திற்குக் காரணமா மென்பது பிரசித்தமாம்; அங்ஙனமே, ஒருவன் யாதாவதொரு பொருளைப்பற்றிப் பேராசை கொள்ளுவானாயின், அஃது அவனது நாசத்திற்குக் காரணமாம்.

5. சீவர்கள் பிறப்பதற்குக் காரணம் அவர்கள் மரண மடையும்போது கொள்ளும் உலக சம்பந்தமான எண்ணமேயாம்; அவ் வெண்ணமில்லா திறப்பவர் பிறப்பதில்லையாம்.

6. பிறர் இறப்பதைத் தாம் பலமுறை கவனித்துக் கண்டிருந்தும், 'நாம் மாத்திரம் இறக்க மாட்டோம், இமயமலை போல என்றும் இப்படியே யிருப்போம்' என்னும் தீர்மான முடையவர்தாம் மூடர்களுள் முதன்மையான மூடராவர்; அவரோடு நட்புக் கொள்ளுபவர்க்குத் துன்பந் தொடர்பாக வருவதாம்.

7. கிழக்கே உதயமாகும் சூரியன் மேற்கே அஸ்தமிப்பது நிச்சயமாம்; மேலே எறிந்த கல் கீழே விழுதலும் நிச்சயமாம்; அங்ஙனமே, பிறந்தவர் இறப்பதும் நிச்சயமாம்; அதனால், நாம் இறப்பது நிச்சயமாம் என்பதை மறவாதிருப்பவர் தீவினை செய்வது சிறிது மில்லையாம்.

8. சீவர்களுக்கு இளமைப்பருவம் அதி சீக்கிரத்தில் மாறிப்போவது, உள்ளங் கையிலுள்ள நீர் அதி சீக்கிரத்தில் வற்றிப் போவது போல்வதாம்—அதனால் எவரும் தம் மிளமைப்பருவத்தைக் கண்டு இறுமாந்திருப்பது

கூடாது ; ஆனால், தம் மிளமைப்பருவம் கழிவதற்கு முன்னே தாம் செய்ய வேண்டியவற்றை மறவாதும் தவறாதும் செய்தல் வேண்டும்; செய்தாற்றான் சுகமடைதலாம்.

9. வயோதிகரிடத்து ஆசைவளருதல், மழைக்காலத்தில் சுரைக் கொடிவளருதல் போல்வதாம்; அதனால், அவர் உண்பாரைக் கண்டும் உடுப் பாரைக் கண்டும் பொறாமையுற்றுத் துக்க மடைகின்றனர்—யௌவனப் பருவம் உள்ளபோதே நல்லோரது நட்பினால் நிராசையைச் சம்பாதித்துக் கொண்டவன், வயோதிகப் பருவத்தில் பிறரது ஆக்கத்தைக் கண்டு பொறாமை யுற்று வருந்துவதில்லையாம்.

10. வெயிற்காலத்தில் குளம் முதலியவற்றுள் நீர் இல்லா தொழிவது போல எவர்க்கும் வயோதிகப் பருவத்தில் அழகில்லா தொழிகின்றது; அதனால், எவரும் எப்போதும் நாம் அழகாயிருப்போ மென்று கர்வங் கொள்வது கூடாது ; கர்வங் கொண்டவர் கனம் பெறுவதில்லையாம்.

11. சீவர்கள் யௌவனப் பருவத்தில் அநுபவிக்கும் இன்பங்கள் அவர்களுக்கு வயோதிகப் பருவம் வந்தபோது, வில்லாளிகள் வில்லில் தொடுத்த அம்பு அதனை விட்டு நீங்கி வெகுதூரம் சென்று விடுவதுபோல, அவரை விட்டு நீங்கி வெகுதூரம் சென்று விடுகின்றன ; அதனால், எவரும் செல்வச் சிறப்பினால் நாம் இன்பமுடையவரா யிருக்கின்றோம் என்று இறுமாந்திருப்பது கூடாது ; இறுமாப்பால் கெட்டவர் எண்ணிறந்தவ ராவர்.

12. ஒருவனுக்குச் சுகபோகம் மிகுதியாக வருவது அவனுக்குப் பெருவியாதி வருவது போலவாம்; சுகபோகம் மாறும்போது அது தன்னை யுடையவனுக்கு சொல்லுதற்கரிய துன்பத்தைத் தருதலின், பெரு வியாதியினும் மிகக் கொடியதாம்.

13. ஒருவனுக்குச் செல்வம் பெருகி வருவது அவனுக்கு ஆபத்து பெருகி வருவதைத் தெரிவிப்பதாம். செல்வமுடையவர் எப்பொழுதும் அச்சமுடையவராயும், காவலுடையவராயும் இருக்கின்றனனர். செல்வமுடையவர் உலோபிகளாக இருப்பாராயின், அவருக்குப் பலரும் பகையாகி விடுகின்றனர். அதனால் செல்வம் பெருகி வருவதைக்கண்டு எவரும் களிப்படைதல் கூடாதாம்.

14. நாம் சாவதற்குக் காரணம் பிறப்பதேயாம். நாம் பிறவாதிருக்கும் நிலையைப் பெறும் பாக்கியமுடையவ ராவோமாயின் செத்துப் பிறக்கும் சங்கடத்திற்குரியவ ராகோம்.

15. சூரியனைப் பிரத்தியட்சமாகப் பார்ப்பவருக்கு இருளில்லா தொழிவதுபோல தன்னை (ஆத்மாவை) பிரத்தியட்சமாகக் கண்டவர்க்குப் பிறப்பில்லா தொழிவதாம்.

16. நமக்குக் கவலையுண்டாவதற்குக் காரணம் நாம் நீண்டநாள் நோயின்றி, வறுமையின்றிப் பகையின்றி வாழ வேண்டுமென்று எண்ணும் எண்ணமேயாம். நோயின்றியும், வறுமையின்றியும், பகையின்றியும் வாழ்வது எவர்க்கும் முடியாத தொன்றாம். அடுத்த க்ஷணத்தில் நாமிருப்பது நிச்சயமன்று

என்னும் ஸ்திர புத்தியுள்ளவர் தாம் கவலையுற்று வாழ்வதற்குரியவ ராவர்—குவலயத்தில் கவலையற்றவனே கடவுளாவன் என்பது ஒரு பிரசித்தமான பழமொழியாம்.

17. துறந்தவர்க்கே வீடுண்டாகுமென்பது சாஸ்திரங்களின் நிச்சயமாம். துறப்பதென்பது எதனை யெனின், அது சரீரத்தில் யான் என்று கொண்டுள்ள விபரீத புத்தியையாம். அப்புத்தியை விட்டவர்தாம் உண்மைத் துறவினராவர். நமக்கு யமன் துறவு ஈவதற்கு முன்னரே நாம் சரீரத்தில் யானென்று கொண்டுள்ள அபிமானத்தை விட்டால்தான் சுகமடைதற் குரியவராவோம்.

18. சுகர்—வாமதேவர்-துர்வாசர்-அகஸ்தியர்-வசிஷ்டர்-பாராசரர் - வியாசர், திருமூலர்-சிவவாக்கியர்-ஞானசம்பந்தர்-அப்பர்-சுந்தரர் - மணிவாசகர்—சடகோபர்-பொய்கையார்—பேயார் பூதத்தார்-காரைக்கால் அம்மையார்-பட்டினத்தடிகள்-பத்திரகிரியார்-தாயுமானவர்-சிவப்பிரகாசர்-சாந்தலிங்கர்- குமாரதேவர்—சிதம்பர சுவாமிகள்-சச்சிதாநந்த சுவாமிகள் முதலாயினோர் பற்றற்ற பரம ஞானிகளாய் விளங்கியதற்குக் காரணம் அவர்கள் பரமேசுவரனுடைய அருளை முன்னிட்டுச் சற்குரு கிருபையால் தமது யதார்த்த சொரூபத்தை உள்ளபடி சுவசொரூபமாகக் கண்டமையேயாம். அங்ஙனமே நாமும் நமது யதார்த்த சொரூபத்தை ஈசுவரனது அருளை முன்னிட்டுச் சற்குருவின் கிருபையால் சிவ சொரூபமாக அறிவோமாயின் பற்றற்ற பரமஞானிகளாய் விளங்குவதற்குரியவராகுவோம்-அப்போது தான் நாம் அல்லலற்று வாழ்வதற்குரிய வாழ்க்கையைப் பெற்றவராவோம்.

19. பிராணிகளிடத்திற் கருணையும், கிடைத்த வளவில் சந்தோஷமும், எவரிடத்திலும் நட்பும், உலகப் பொருள்களைத் துரும்புபோல் காண்டலாகிய உதாசீனமும் உடையவர் தாம் உண்மையான வேதாந்திகளாவர், இந் நான்கு குணங்களி லொன்றேனு மில்லாத ஒருவர் தம்மை வேதாந்தி யென்று சொல்லிக் கொள்வது உலகத்தாரை வஞ்சிப்பதற்கேயாம்.

20. மலரிலுள்ள வாசனை சிறிது சிறிதாக நீங்கி விடுவது மிகப் பிரசித்தமாம். அங்ஙனமே நமது மனத்திலுள்ள கெட்ட எண்ணங்கள் நல்லோரது நட்பினால், சிறிது சிறிதாக நீங்கி விடுமாயின், நாம் சுபமான காரியங்களை மறந்துஞ் செய்தற்குரியவ ராவோம். ஈனத் தொழில் புரிபவர்க்கு இடானைத் துழ் சொர்தமாம் என்பது மிகு பிரசித்தமாமன்றோ.







## 43. இங்கிலாந்தும் பிரஞ்சுப் புரட்சியும்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

ஸ்வதந்திரப் போக்கும் பிரஜா உரிமையில் பற்றுதலும் உள்ள பிரிட்டிஷ் மஹாஜனங்கள் பிரஞ்சு குடிகளின் பரிதாப நிலையைக் கண்டு அனுதாபங் கொண்டிருந்தார்கள் என்ற விபரம் முந்தின கட்டுரைகளொன்றில் குறிப்பிடப்பட்டது நேயர்கள் ஞாபகத்திலிருக்கலாம். அதையொட்டி இங்கிலாந்திலும் அயர்லாந்திலும் பல இடங்களில் அனுதாபச் சங்கங்கள் நிறுவப்பட்டு அனுதாபத் தீர்மானங்களும் செய்யப்பட்டன. ஆனால் 1789-92-ல் ஸ்டேட்ஸ் ஜெனரல் என்ற சட்டசபை, தேசியசபை என்ற பெயர்கொண்டு புதிய அரசியலமைப்பை ஸ்தாபித்த போதும், எல்லாருக்கும் சமஉரிமை அரசியலில் உண்டு என்றபோதும் உள்ள அனுதாபம், 1793லிருந்து 1795-வரையில் நடந்த "பயங்கர ஆட்சி" (The Reign of Terror)யைக் கண்டகாலத்தில் அருவருப்பாக மாறிவிட்டது. "ஜனங்களுக்கு மத ஸ்வதந்திரம் கொடுக்கப்பட்டது. அரசியல் ஸ்வதந்திரம் கொடுக்கப்பட்டது. பிரஜா உரிமைகள் எல்லாருக்கும் சமம் என ஏற்பட்டது" என்றாலுட் தாராள நோக்கமும் சீர்திருத்த உத்வேகமும் கொண்ட அந்த ஆரம்ப கர்த்தாக்களுக்கு அனுபவஞானம் இல்லாததின், இந்த உரிமைகளை அனுபவ சாத்தியமானவைகளாகத் திடமெனச்செய்வது முடியாத காரியமாக இருந்துவிட்டது. அதைப்பற்றின விவாதங்கள் சபையி னுட்புறத்தில் நடந்து கொண்டிருக்கையில், வெளியில் வெறிகொண்ட ஜனங்களின் போக்கு கட்டுப்படாததாக ஆகிவிட்டது. "உண்ண உணவும் உடுக்க உடையும் திண்டாட்டமாக இருக்கும்போது, உள்ளுக்குள்ளே உபயோகமில்லாத வெறும் வாய்ப்பேச்சு விவாதங்களினால் என்ன பயன்? ஒரு கவளம் ஆகாரமோ, ஒரு விரலளவு துணியோ கிடைக்க வழி யில்லாமல் வெறும் விவாதம் பயனும் இல்லை" என்ற போக்கு மேலிட்டு விட்டது. சகஜமோ, சகஜமில்லையோ என்பது பசிப்பிணியின் கொடுமையிலுள்ளவர்கள் மூலம்தான் தெரியவேண்டும்! ஏனெனில், "பசியேப்பக் காரனுடைய கஷ்டங்களை புளியேப்பக்காரன் எவ்வா றறிவான்?" என்பது நாடோடியான பாமர பழமொழி! "பசி வந்திடப் பத்தும் பறந்திடும்" அன்றோ? இந்த ஒரு போக்கில்தான் பாரிஸ் பாமரமக்கள் கட்டறுந்து அத்துமீறி, வரம்பு கடந்து, சிறைச்சாலைகளைத் தாக்கி, கைதிகளை விடுதலை செய்து, உணவுப் பொருள்கள் உள்ள இடங்களைச் சூறையாடினர் என்பது ஞாபக மூட்டப்படவேண்டிய விபரமாகும்.

அப்படி வரம்பு கடந்து நடந்தவர்கள் வெறி கொண்டவர்கள். ஆழ்ந்த துயரங்களை அனாதி காலமாக அனுபவித்தவர்கள் "சாகத் துணிந்தவர்களுக்கு சமுத்திரம் கணுக்கா லளவாகும், சண்டி வெருண்டால் காடு கொள்ளாது."

என்பவற்றிற்கேற்ப அதீதமான அதிக்கிரமங்களில் இறங்கினர். விஷத்திற்கு விஷமே மாற்றுவது போலும் தீயே தீயை யணைப்பதுபோலும் அதீத செய்கைகளிலேயே அதீத செய்கைக்காரர்களான ரோப்ஸ்பியரும் டாண்டனும் ஒருவரை யொருவர் கொலைசெய்து கொண்டனர் என்பது சரித்திரப் பிரசித்தம். ஆகக்கூடிய பலன் அகோரமான இரத்தஞ் சிந்துதல்தான்! பாரீஸ் தெருக்களில் இரத்தவெள்ளம் ஆறாக ஓடிற்றாம்! "வாய்ப்பேச்சு விவாதங்கள் மட்டுமல்ல, அதீதச் செயல்களும், உணவுக்கு ஒரு கவளமோ, உடுக்க ஒருசாண் துணியோ கொடுக்காதவை" என்ற உண்மை தெளிவதற்குள் எவ்வள வுயிர்கள் பலியாயின!! என்னே பலாத்காரச் செய்கைகளின் கொடூரம்!!! (சரித்திரம் அதிலும் பழைய சரித்திரங்கள் படிப்பதினால் என்ன நிரம்பி விடப்போகிறது? என்று கேட்பவர்களுக்கு இந்தப் பிரஞ்சுப் புரட்சியும் இதுபோன்ற இன்னும் இரத்த வெறிபிடித்த பல கிளர்ச்சிகளும் நல்ல பதில் கொடுக்கும். 'பலாத்கார வெற்றி ஒருகாலும் நிலைக்காது. பிறருடைய அனுதாபத்தைப் பெறவே பெறாது! அச் செய்கைகளை செய்பவருக்கே தீங்கு திரும்பி வந்துவிடும். அருவருப்பும் ஏற்பட்டு விடும். பிறரும் நடுங்கி, விலகி யோடி சபிப்பர். தீர்க்க விரோதம் ஏற்பட்டு மேலும் கொடுமையே யதிகரிக்கும். எடுத்த காரியமும் சித்திக்காது. சித்தித்தாலும் நிலை பெறாது என்ற இவ்வளவு கருத்துகளை யடக்கியே பலாத்காரமற்ற சாத்வீக, வீர வெற்றி யடைவது சிரேஷ்டம் என்ற போதனை வற்புறுத்தப்படுகிறது. இப்படி வற்புறுத்தப்படுவது உலக சரித்திரத்திலேயே ஒரு புதுமை யாகும். பல விதங்களிலும் பெருமை பெற்றிருக்கும் இப்பாரத தேசத்திற்கு இப் புதுமையும் ஒரு பொன்றாப் புகழாகும் என்பது மூக்காலும் வற்புறுத்தப்பட் டிருக்கிறது.)

இவ்வளவு கொடுமைகளும் முடிந்து அலுத்து, நிதானஸ்தர்கள் நிர்வாகத்திற்கு வந்த பிறகுதான் நிம்மதியான நிலைமை நிறுவியது. மூடியா சென்றால் கொடியாசென்று நினைத்து, குடியரசை ஸ்தாபித்து, தேசோத்தாரணமான ஆக்க வேலைகளில் மனம் செலுத்தப்பட்டபோது, பிரஞ்சு நிர்வாகிகள் சும்மா விராமல், தங்கள் தேசத்தில் குடியரசு நிறுவியதுபோல், பிறதேச ஜனங்களும் விரும்பினால் அப்படியே குடியரசு ஸ்தாபித்துக் கொடுக்கத் தயார் என்ற பிரகடனத்தைச் செய்தனர். இதே சமயத்தில் இறந்து பட்ட பிரஞ்சு ராணிமேரி அண்டாயினெட் (Antoinette) என்ற லூயி XVI ன் மனைவி ஆஸ்திரிய இளவரசி என்ற முறையில் அவளையும் அவள் கணவனையும் கொலை செய்த பிரஞ்சுக்காரரைப் பழிவாங்க வேண்டி ஆஸ்திரியர் பிரான்ஸின் மேல் படை யெடுத்தனர். அந்த ஆஸ்திரியரை அடித்துத் துரத்தி பிரஞ்சுக்காரர் வெற்றி பெற்றனர். அயல்நாடுகளிலுள்ள கிளர்ச்சிக்காரர்களுக்கு இந்த சம்பவம் பிரமாதமான ஊக்கத்தை யளித்தது. இது வரையில் அனுதாபத்துடனும், வர வர வெறுப்புடனும் கவனித்து வந்த ஆங்கில நிர்வாகிகளுக்கு விழிப்பேற்பட்டது. 'பயங்கர ஆட்சியின் கொடுமைகள் ஒன்றுக்குப் பத்தாய் அவர்கள் மனதில் விருத்தியாயின. சும்மா விருந்தால் காரியம் கெட்டுவிடும். வேரிலேயே, முளைக்கும் போதே கிள்ளி யெறிந்து விடவேண்டும்' என்ற உணர்ச்சி பரவ ஆரம்பித்து விட்டது. இந்த நிலைமையில் இங்கிலாந்தில், அனுதாபச் சங்கங்கள் யாவும் அடக்கப்பட்டன; பேச்சு சுதந்திரம் பறிக்கப் பட்டது. கூட்டங் கூடும் உரிமை குழியில் தள்ளப்பட்டது. பரிஹாரணம்

அமுலுக்கு வந்தது. சீர்திருத்தங்கள் வேண்டும் என்று சிந்தித்திருந்த சிறிய பிட்டும், சீர்திருத்தம் என்றாலே சீறி விழும் நிலைமைக்கு வந்துவிட்டார் என்று முன்பு குறிப்பிடப்பட்டது!

இந்த அதிகப் பிரசங்கமான பிரகடனத்தைத் தடுத்து, பிரான்ஸ் ஜனங்களுக்குப் புத்தி கற்பிக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இதர ஐரோப்பிய தேசங்கள் ஒன்று கூடி சிநேக உடன்படிக்கை செய்து கொண்டன. அவற்றுள் முக்கியமானவை இங்கிலாந்து, ஆஸ்திரியா, பிரஷ்ஷியா (தற்காலத்திய ஜர்மனி) தேசங்களாகும். ஆனால் ஆரம்பத்தில், தாங்கள் தலையிட்டுக் கொண்ட காரியத்தின் போக்கை எளிதாக நினைத்து, அலக்ஷிய புத்தியுடன், "இந்த பிரஞ்சுப் புரட்சிக்காரர்களை ஒரு நொடியில் அடக்கி விடலாம்" என்று மஹாமேதாவியான சிறிய பிட்கூட நினைத்து விட்டார். அப்படியே ஒரு சமயத்தில் பரிகாசமாக சொல்லவும் செய்தாராம். உண்மையில், தேச மஹாஜனங்களிடம் பரபரப்பு ஏற்பட்டு விட்டதன் காரணமாக உண்டான இயக்கம் அது. அவ்வளவு இலேசில் அடக்கிவிட முடியாது என்ற அறிவு வர வரத்தான் ஆங்கிலேயருக்கும் மற்றவர்களுக்கும் தெரிந்தது. உண்மையில் 1792-லிருந்து 1802 வரையில் சண்டை செய்ய நேர்ந்தது. பிறகும் நெப்போலியன் என்ற வீரன் அப்போது தோன்றியதால் அவனுடன் 1802 லிருந்து 1815 வரையில் மும்முரமாகச் சண்டை செய்ய நேரிட்டு விட்டது. இங்கிலாந்து மாட்டிக்கொண்ட பிறகு முழுப்பொறுப்பும் இங்கிலாந்தின் தலையிலேயே சுமந்தது. இதர தேசங்கள் வெற்றி ஏற்படும் போது சேர்ந்து கொள்வதும், பிறகு அடங்கிவிடுவதுமாக இருந்து, சுமார் 4 தடவைகளுக்கு மேல் பிரஞ்சுக்காரருக்கு விரோதமாக பலமான சேர்க்கைகளும், சிதைவுகளும் ஏற்பட்டு, இங்கிலந்து திணறி விட்டது சரித்திரத்தில் காணப்படும் ஒரு உண்மை. 1805-ல் சிறிய பிட்டும், தளர்ந்து மனதுடைந்து இறந்தார். யுத்தத்தின் பொதுப் போக்கை விளக்குமிடத்து, பெருவாரியான நிலச்சண்டைகளில் பிரஞ்சுக்காரர்கள் வெற்றியடைவதும், பல சண்டைகளின் கௌரவம், ஒரு கடல் சண்டையினால் தொலைவதும், அந்தந்தக் கடல் சண்டைகளும் ஆங்கிலேயர்களுக்கு ஆணித்தரமான வெற்றிகளாக இருந்தன என்பதுமாகும். இந்தப் போக்கு "Throw a bridge over the English Channel! To-morrow England will be ours" (இங்கிலாந்து கால்வாயைத் தாண்ட ஒரு பாலத்தை இன்று சிருஷ்டியுங்கள். நாளை இங்கிலாந்தை நமது ஆக்கிவிடுகிறேன்) என்று பிரஞ்சு வீராதிவீரன் நெப்போலியன் சொன்னான் என்பதினால் ருஜுவாகும்!! அதனால் இதர நேசதேசங்களை விட இங்கிலாந்துக்கு அதிகப் பொறுப்பு ஏற்பட்டதில் ஏதேஷ்டமான யுத்தச்செலவும் நிர்வாக கஷ்டமும் ஏற்பட்டுவிட்டது. இதர தேசங்களுக்கும் இதேபோன்று சிரமங்கள் இருந்த போதிலும், "உண்பான் தின்பான் நபராகி, குத்துக்கு நிற்பான் வீரமுஷ்டி" என்பதுபோலும், "மோதிரப் பணத்திற்கு முத்தண்ணா, சாப்பாட்டிற்கு நான் இருக்கிறேன்" என்பதுபோலும், நடந்துகொண்ட போக்கு தோன்றும். ஏனெனில் நெப்போலியன் உன்னத நிலையில் இருக்கும் போது அவசர அவசரமாய் இங்கிலந்துடன் நேச உடன்படிக்கைகள் செய்து கொள்வதும், சரியான சந்தர்ப்பத்தில் சளைத்ததுபோல, சேர்க்கையிலிருந்து விருதிவிடுவதும், கடைசியில் இங்கிலாந்துமட்டும் சண்டையை முடிக்கும் நிலை

மையே இருந்திருப்பது சாதாரண எந்த சரித்திரத்திலிருந்தும் தெரியவரும். (பொது வாழ்வில் இம்மாதிரியான சிநேகிதர்கள் ஏற்பட்டு குடியைக் கெடுக்கும் போக்கையறிந்தே, "சாக்ஷிக்காரன் காலில் விழுவதைக் காட்டிலும் சண்டைக்காரன் காலில் விழுவதே மேல்" என்ற பழமொழியைப் பாடமாக நம் முன்னோர்கள் ஏற்படுத்தினார்கள்போலும். "ஆமாம் அப்படித்தான்! விடாதே! நாங்கள் இருக்கிறோம் பார்த்துக் கொள்ளுகிறோம். அவனை ஒழித்துவிடுவது மிக்க அவசியம்" என்று தட்டிக்கொடுத்து, தூக்கிவிட்டு "பல நண்பர்களுள்ள முயலை"போல சீரழிய விட்டுவிடுகிறார்கள் என்பது உலகானுபவம். "Beware of your friends!" (நண்பர்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இரு! என்றும் கூறியிருக்கின்றனர்.)

மேலே குறிப்பிட்டபடி "ஆழந் தெரியாமலும் அலக்ஷியமாகவும் காலை விட்டு"க்கொண்ட இளைய பிட், பிறதேசங்களை நம்பிவிட்டார். காரியமோ பெரிய காரியமாகிவிட்டது. தேசத்திற்குள்ளேயே கக்ஷிகளும் கிளர்ச்சிகளும் ஏற்பட்டு ஐர்லந்து தேச மக்களிடத்திலும் உணர்ச்சி ஏற்பட்டு "காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளுவது" போல இங்கிலந்துக்கு விரோத உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது. பிரஞ்சுக்காரர் தங்களுடைய வீரவெறிப் போக்கு ஒழிந்து, உண்மையில் தேசப்பற்று உள்ளவர்களாகி, அதிக உள்நாட்டுத்தொந்திரவு இல்லாமல்செய்து, அந்த தேசப்பற்று ஊக்கத்தை தேசத்திற்கு வெளியே செலுத்தச்செய்து, ஹாலந்து ஆஸ்திரியா இங்கிலாந்து தேசங்களுக்கு விரோதமாக சண்டை செய்வதாக பிரகடனம் செய்தார்கள். இங்கிலாந்தின் நேசதேசமான ஹாலந்தின் மீதும் பெல்ஜியத்தின் மேலும் படையெடுத்தார். பெல்ஜியம் பிடிபட்டுவிட்டால் வந்தது ஆபத்து இங்கிலாந்துக்கு என்ற முறையில் யுத்தம் ஆரம்பித்துவிட்டது. இந்த பிரஞ்சு வேகத்தைக் குறைக்க பிரான்ஸுக்குள்ளேயே கலகங்களை மூட்டிவிட பிட் செய்த முயற்சிகள் வீணாயின. ஹாலந்து ஜெயிக்கப்பட்டுவிட்டு குடியரசு ஸ்தாபிக்கப்பட்டது. அதைத் தடுப்பதற்காக அனுப்பப்பட்ட இங்கிலந்து அரசன் ஜார்ஜ் IIIன் சொந்தக்காரன் தோல்வியுற்றான். இதே சமயத்தில் பிரஞ்சுக்காரர்களை ஊக்கி வெற்றி பெறும்படி செய்ய உலகவீரனை நெப்போலியனும் தோன்றி படிப்படியாய் சேனைப்பதவிகளில் மேல்வந்து, அவனுடைய யோசனைப்படி ஆஸ்திரியாவின் ஆதீனத்தில் அடிமைப்பட்டு அனாதைவாய்க் கிடந்த இடலி தேசத்தின்மேல் படையெடுப்புப் பிரயத்தனமும் செய்யப்பட்டது! ஆஸ்திரியரும் அம்மாதிரி விரட்டி இடலியினின்றும் 1795 விரட்டப்பட்டனர். இந்த இடலி யுத்த முயற்சிபோக்கைக்கண்ட இதர தேசத்தினர் அலறிப்போய் இங்கிலந்தின் கக்ஷியினின்றும் விலகினர். நெப்போலியனுடைய உயர்ந்த வீரத்தையும் துணிச்சலையும் உலகத்தாருக்கு அறிவித்தது இந்த சம்பவம் என்று சொல்லப்படும்.

பிரஞ்சுக்காரர்கள் ஐர்லந்திலும் நுழைந்து கலகம்செய்ய எத்தனித்தனர். ஸ்பெயின்காரர்கள் இங்கிலாந்துக்கு விரோதமாக கிளம்பியதுடனில்லாமல் தங்களுடைய கப்பல் படைகளையும் பிரஞ்சுப் படைகளோடு சேர்த்துக்கொண்டு இங்கிலாந்தின்மேல் படையெடுக்க ஏற்பாடு செய்துவிட்டது. இதற்குள் இங்கிலந்தில் பணமுடை நெருக்கடி. கப்பல்படை மாலுமிகளுக்குள் கலகம். எல்லாம் ஒன்று சேர்ந்தன. தெய்வாதீனமாய் கலகம் அடக்கப்பட்டு, 1797-ல் செயின்ட்ஸ் வின்ஸெண்ட் என்ற ஸ்பெயினுள்ள முனைக்குப் பக்கத்தில் சமுத்

திரத்தில் நடந்த ஒரு யுத்தத்தில் கடைசி நிமிஷத்தில் ஜார்விஸ், நெல்சன் என்ற இருதளகர்த்தர்களுடைய அளவுகடந்த முயற்சியால் ஸ்பானியர் தோற்றனர். இங்கிலாந்துக்கும் மூச்சுவிட நேரம் ஏற்பட்டது. இதே சமயத்தில் படையெடுத்துவந்த டச்சுக்காரர்களும், டன்கன்என்ற ஆங்கில கப்பல்படைத் தலைவரால் காம்பர்டௌன் என்ற இடத்திற்கு அருகில் தோற்கடிக்கப் பட்டனர். இருந்தாலும் பிரான்ஸை எதிர்த்த ஆஸ்திரியர் சரணமடைந்து சமாதானம் செய்துகொண்டுவிட்டனர். ஆக இந்தநிலையில், ஹாலந்து பெல்ஜியம், ஆஸ்திரியா, ஸ்பெயின் அடங்கிவிட்டன. இதாலிதேசம் பிரஞ்சுக்காரர் வசமே யாகிவிட்டது. மிகுந்து நின்று முழுப்பொறுப்பையும் சுமந்து நின்றது இங்கிலாந்துதேசம்!

அந்த சமயத்தில், ஆங்கிலேயரை அழிக்க வேண்டுமானல் இந்தியாவைப் பிடுங்கிக்கொண்டு இந்திய வியாபாரத்தில் மண்போடவேண்டும் என்ற யுக்தி உதித்தது நெப்போலியன் மனதில்! அதுதான் தாமதம். ஒரு கப்பல் படையை மத்திய தரைக்கடலுக்கு கடுமையாக விரட்டி, ஆங்கிலேயர் வசமிருந்த மால்டாவைஜெயித்து, ஈஜிப்ட் (எகிப்து) வழியாக செங்கடல்சென்று இந்தியாவுக்கு வந்து விடுவதற்கு ஹேதுவாக, இந்தியாவில் அப்போது ஆங்கிலேயரிடம் ஆத்திரங் கொண்டிருந்த திப்பு சுல்தானுடன் உடன்படிக்கை செய்துகொண்டுவிட்டான். புறப்பட்டான். ஆனல் எப்படியோ ஆங்கிலேயருக்குத் தெரிந்து, நெல்சன் என்ற ஆங்கில தளகர்த்தன் பெரிய கப்பல் படையுடன் ஓட்டோட்டமாய் ஓடிவந்து, பிரஞ்சுபடையை நீலநதி முகத்துவாரத்தில் பிடித்து அங்குநடந்த சண்டையில், பிரஞ்சு படைகளை 1798-ல் சிதறடித்தான். அந்த சண்டையில்தான் "தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" என்ற வாசகத்தை "உயிரைக் கொடுத்து காப்பாற்றிய கஸாபியான்கா என்ற குழந்தை பிரஞ்சுவீரன் அழியாப்புகழ் காவியங்களில் பெற்றான். நெருப்புப் பிடித்துக்கொண்ட ஒரு கப்பலில் நின்ற அச்சிறுவன், தந்தையின் உத்தரவின் படி ஓரடியும் எடுத்துவைக்க மறுத்து நெருப்பிலேயே உயிர் துறந்தான்! தோல்வியுற்ற நேபோலியன் மனம்மட்டும் சளைக்காதவனாய் ஓட்டம் பிடித்தான் பிரான்ஸுக்கு. அதற்குள் அங்கு ஏற்பட்ட குழப்பத்தை யடக்கினன். தானே சர்வாதிகாரியானன். இந்த சமயத்தில் தலையெடுத்து கிளம்பிய ஆஸ்திரியா தேசத்தை மாரெங்கோ என்ற இடத்தில் 1800, செம்மையாய் நசுக்கியைத் தோற்கடித்து, லூனவில்லி என்ற இடத்தில் சரணுகதி யடைந்ததற்கொப்ப ஒரு சமாதானம் செய்துகொள்ளும்படி யடித்தான்! இதனல் இரண்டாவது சேர்க்கை யுடன்படிக்கை சிதறி, இங்கிலாந்து தனித்து, தவித்து, தத்தளித்து, திணறியது. இதே சமயத்தில், அமெரிக்க சுதந்திர யுத்தத்தின் போது ஏற்பட்டபடி "ஆயுதப்படையுடன் கூடிய நடுநிலைமை" (The Armed Neutrality) ஏற்பட்டு இங்கிலந்துக்கு நெருக்கடி தாங்கமுடியாது உண்டாகிவிட்டது. நெப்போலியனும் தன் வாக்குக்கு மறுவாக்கில்லாதபடி செய்துகொண்டு சர்வாதிகாரியானன். இங்கிலந்தும் அமீன்ஸ் என்ற இடத்தில் 1802-ல் சமாதானம் செய்துகொண்டது. அடுத்து நெபோலியன் சக்கரவர்த்தியே யாகி, அவனுடன் இங்கிலந்து நடத்திய மாபெரும் யுத்தங்களின் விவரம் எழுதப்படும்.

---



# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

42-வது காரிகை

புருஷார்த்த ஹேதுகமிதம் நிமித்தநைமித்திக பிரசம்கேன—பிரகிருதேః விபுத்வயோ ாநடா வத்வ்யதிஷ்டதே லிங்கம்.

இலிங்கம் புருஷனுடைய வினைதார்த்தங்களைச் சாதித்துத் தருவதற்காக அமைந்த வொன்றும். இவ்வாறு சாதித்துத் தருதற்கண் எதுபோல் ஒழுகுகின்றதெனின், அரங்கத்திற் பார்ப்பார் பொருட்டு பற்பல வேடந்தாங்கி நடிக்கும் நடன்போல், புருஷ சந்நிதானத்தில் தன்னை நடித்துக் காட்டுகின்றது.

இவ்வாறு பற்பல கோலங்கொண்டு எவ்வாறு இலிங்கம் நடிக்கக் கூடுமெனின், பெரும் பரப்பினதாய பிரகிருதியோடு புணருவதால் அப் புணர்ச்சி காரணமாகத் தன்பாலுள்ள எண்ணங்களெல்லாம் பலவகைத்தாய கோலங்களாய் விளைய (புருஷன் தன்னைவிட்டு முத்திக்கரை யேறும்வரை) ஓய் ஒழிவிலா அற்புதக்கூத்தைச் செய்விக்கின்றது.

உரை. கௌடபாதருரை:—புருஷனது நன்மையைக் கருதியே பிரதானம் கிருத்தியத்திற்கு ஆரம்பிக்கின்றது. புருஷன் தரிசிக்க வேண்டியன இரண்டு; அத் தரிசனத்தை விளைத்தற்காகவே பிரதானம் முயற்சிப்பது. காணுதி இந்திரியங்கள் வாயிலாக சப்தம் முதலியவற்றைக் காணுதல் ஒன்று; குணங்களுக்கும் தனக்கும் (புருஷனுக்கும்) உள்ள நுட்பமான வித்தியாசத்தைக்காணுதல் மற்றையது. சப்தாதி விஷயங்களைக் காணுதல் என்பது இந்திரிய போகமாகும்; இஃது திவ்யகந்தம் முதலியற்றைப் பிரமாதி லோகங்களில் அனுபவித்து இன்புறுவது. மற்றையதோ குணங்களுக்கும் தனக்கும் (புருஷனுக்கும்) உள்ள வேற்றுமையைக்கண்டு பிரபஞ்சக்கட்டில் நின்று, விடுதலை (மோக்ஷம்) பெறக் காரணமாகும். ஆகவே பிரகிருதி போக மோக்ஷங்களைக் காட்டுதற்கே யமைந்தது.

நிமித்தங்கள் எனப்படும் எண்ணங்கள் புண்ணியபாவம் முதலியன; அவற்றின் பலனாகிய நைமித்தியங்கள் சொர்க்க ஆரோகணம் முதலியன.

பிரதானத்தோடு புணருவதால் சகல போகங்களும் விளைகின்றன. எவ்வாறெனின் அரசன் தனது ஆக்ஞா சக்கரத்தின் வலியால் தன் இஷ்டப்படி வேண்டியவற்றை யெல்லாம் செய்து இன்புறுவதுபோல் பிரகிருதியாகிய

போராற்றல் வாய்ந்த பிரதானத்தைக்கூடி தனது எண்ணங்களெல்லாம் வெளிப்பட்டு பற்பல கோலங்களாக இலிங்கம் சகல தரிசனங்களையும் புருஷனுக்குச் செய்விக்கின்றது.

இலிங்கம் மிகச் சூக்குமமானது. பரமாணுக்கள் ஆகிய பஞ்சதன் மாத்திரைகளால் ஆயது. இதனுள் பதின்மூன்று காரணங்கள் வதிகின்றன. பஞ்சதன் மாத்திரைவடிவாய் பதின்மூன்று காரணங்களை, உள்ளமையப் பெற்ற இவ் இலிங்க சரீரம் தேவர், மனிதர், விலங்கு முதலிய ஜீவபேதங்களாக அவதரிக்கின்றது. எவ்வாறெனின் நடன்போல் நடன் திரை மறைவிற் சென்று மனிதவேடம் போட்டுக்கொண்டு வெளிப்படுகின்றான். பின்னரும் திரைமறைவிற் சென்று கோமாளியாக வெளி வருகின்றான். இவ்வாறே சூக்கும ரூபமாகிய இலிங்க சரீரம் தன்னுடைய எண்ணங்களின் சக்தியால் உந்தப்பட்டு சொர்க்கம், பூமி, பாதலங்களுட் புகுந்து தனக்கு ஏற்படும் கோலங்களைத் தாங்கித் திரிலோகமாகிய அரங்கத்தில் விளையாடுகின்றது. யானையாகவும், குதிரையாகவும், புமானாகவும், பெண்ணாகவும் மற்றும் எப் பொருளாகவும் மற்றும் எல்லாப் பொருளாகவும் உருத்திரிந்து நாடகமாட வல்லது.

இந் நாடகத்தில் புருஷன் எஜமானனாய் விநோதங்களைத் தரிசிக்கும் பார்ப்பான்; இலிங்கம் நடிப்போன்; பிரகிருதி மறைவாயிருந்து இலிங்கத்திற் பற்பல வேடங்களைத் தரிப்பித்து விளையாட விடுபவன்.

இந் நாடகசாலை மூன்று லோகங்களையும் தன் மாட்டு அமையப் பெற்றதாய் பார்ப்பான் த்ரிபுவனங்களையும் பார்க்கவல்ல திரிலோகி.

எண்ணங்களாகிய நிமித்தங்கள் இவை யென்பதனையும், எண்ணங்களின் பலனாகிய நைமித்தியங்கள் இவை யென்பதனையும் விவரித்துக் காட்டலுற்றார்.

எண்ணங்கள்=பாவங்கள்,=நோக்கங்கள்,=கன்ம விளைச்சிக்குக் காரணங்கள்.

## 43-வது காரிகை

• ஸாம்ஸித்த காஸ்ச்சபாவாஃ ப்ராகிருதிகா வைகிருதிகாஸ்ச்ச தர்மாத்யாஃ —திருஷ்டாஃ கரணாஸ்ரயிணஃ கார்யாஸ்ரயிண ஸ்ச்ச கல்லாத்யாஃ

[எண்ணம், நிமித்தம், நைமித்தம் இவை யென்பனவற்றை விளக்கலுற்றார்.]

[மூவகை ஞானமும் அவற்றிற்கு உரியாரும் உடன் கூறப்பட்டது.]

பாவங்கள் (எண்ணங்கள்) பிறவியின் முன்னரே புத்தியின் கண் உறைவனவாம்; பின்னர் பிறவியால் வெளிப்பட்டு (பிரகிருதிகா பாவங்களென)த் தோன்றுவனவாம்; பின்னரும் ஆசிரியனது உபதேச வாயிலாகவும் தெளிவுறத்தக்கன.

இவ்வித பாவங்கள் யாவை யெனின் அறம், மறம், அறிவு, அறியாமை, அவா இல்லாமை, அவா, சித்தி, சித்தியின்மை.

இவ் வெட்டும் புத்தி தத்துவத்தில் அருவமாயுறைந்து, சிருஷ்டி காலத்தில் காரணங்களாக உருப் பெற்றுத் தோன்றும்; இவை ஜன்மத்திற்கு (பிறவிக்குக்) காரணமாகும்.

காரணங்களாக உருப்பெற்று நிமித்தங்களான பாவங்கள், பின்னர் என்பு, மாமிசம், தோல் முதலாக வாய்ந்த தேகங்களாகிக் காரியப்படுகின்றன. (நைமித்தங்களாகின்றன.)

உரை:—ஆகவே புத்தியாகிய மகத்தை விட்டகலாதன எண்வகைப் பாணி கொண்ட அருவ பாவங்கள்; ஆத்துமா மாயையில் இறங்கி விளையாட ஆரம்பிக்கும் பொழுது இவ் அருவ பாவங்களைக் கொண்ட இலிங்கத்தோடு தொடக்குறுகின்றான். இலிங்கம் தொடுபடவே இவ் எண்வகை அருவமான எண்ணங்களும் ஒளி, இருள் என இரு கிளைப்பட்டு, அறம், அறிவு, வைராக்கியம், சித்தி யெனவும் மறம், அறியாமை, அளி சித்தியின்மை யெனவும் விரிகின்றது. இலிங்கமும் அவ் விருகிளைகளிலும் ஒன்றி மாட்டிக் கொள்கின்றது. இதுவே வித்தை, யவித்தைகளாகிய நிமித்தங்களோடு இலிங்கம் மாட்டிக் கொண்ட சம்பந்தம்.

இனி இருட்கிளை பஞ்சதன் மாத்திரைகளையும் பஞ்சிகரணத்தாலுண்டாகும் கோசங்களையும் உண்டு பண்ணக் காரணமாகும்; ஒளிக்கிளையோ காரணங்களை இந்திரியங்களாக வெளிக்குக் கொண்டுவரக் காரணமாகும். ஆகவே வித்தை யவித்தைகளிற் சிக்குண்ட இலிங்கம் பின்னர் தேகங்களோடும் அவற்றை நடத்தும் இந்திரியங்களோடும், மற்றும் விரிந்து அத்து விதமாகி விளையாடுகின்றது. இதுவே நைமித்தங்களோடு இலிங்கம் சிக்குண்டு மாட்டிக் கொண்ட சம்பந்தம்.

ஓர் மூளையும் (பாவமும்=நோக்கமும்) கொள்ளாதிருந்த ஓங்காரம் புருஷவடிவா யிருந்தது. இவ் வோங்கார புருஷன் இருகிளையும் எட்டு நோக்கமும் வாய்ந்த இலிங்கத்தோடு சம்பந்த மூறவே அவ் விருகிளைகளும் அவ் வெட்டு நோக்கங்களும் வெளிப்படையாய்த் தோன்றின. இதனால் நோக்கங்கள் காரணங்களாயின. மற்றும் ஓங்கார இலிங்கத்திற் புரளவே ஒளியின் வழி இந்திரியங்களும் இருளின் வழி தேகங்களும் தோன்றின.




முத்தி எவ்வாறு கை கூடும்? இலிங்கத்தைத் தேக இந்திரியங்களினின்றும் கழற்றிப் பின்னர் காரணங்களினின்றும் அவித்தையினின்றும் கழற்றி, மகத்தினிடம் சுத்த நோக்கம் ஒன்றுமே யமையும்படி நிறுவித், தான் இலிங்கத்தைத் தனிக்க விட்டுப் பரஞ்சோதியாதல் ஓர்வழி; இஃது கிரமமுத்தி, தன்னைச் சுயம்புவாகக் கண்டு தான் ஒன்றோடும் தாக்கற்றவன் என உணர்ந்து தான் பிரிந்த சோதியோடு ஐக்கிய மாதல் ஒன்று.

பந்தம் கடந்து நிற்கும் பாவங்கள் சாமுசித்திகா பாவங்கள்; காரணங்களோடுறையும் பாவங்கள் பிரகிருதிகா பாவங்கள்; தேகத்தோடுறையும் பாவங்கள் வைகிருதிகா பாவங்கள்.

## 43-வது காரிகையின் தொடர்ச்சி

புத்தியோடு கூடவே சித்திகள் என்றும் உறைன்றன; இவை முதல் எண்ணங்கள்.

பிரகிருதியால் அறம் முதலியவாகக் கரணங்களிற் காணப்படுவன இரண்டாம் எண்ணங்கள்.

வாக்கால் கலலமாக (சிதால், என்பு முதலியவாகக்) காணப்படுவன மூன்றும் எண்ணங்கள்.

உரை. முதலெண்ணம் அல்லது பாவம் என்றும் அழியாதது, புத்தியையொட்டியுறையும். இதுவே விஞ்ஞானம். இதனைத் தெரிந்து கொள்ளுபவர் முத்திக் கரையைப் பிறர் உதவியின்றிக் கிட்டுவர். இவர், தம்மைப் பிறப்பில்லாப்பெரியோரெனக் காண்பர். பிறவியின் முன்னமே இந்த ஞானத்தைப் பெற்றிருப்போர் சாமுசித்தர். இவர் பிறந்தாலும் ஞானத்தைத் தம்மை விட்டகலாது கூடவே கொண்டு வரவும் வல்லவர். கபிலர், கிருஷ்ணபகவன், ஜடபரதன் முதலியோர் இத்தகையினர். கபிலன் பிறக்கும் பொழுதே (சாங்கிய) ஞானத்தோடு அவதரித்தவன் எனக் கௌடபாதர் உரைத்தனர்.

இவர் சாமுசித்திகாபாவத்தோடு அவதரிப்பவரெனக் கொள்ளலாம். இவர்க்கு சுதந்தரம் உண்டு.

சிலர்க்கு ஞானம் பிறவியாற் கிட்டும். சனகர், சனந்தனர், சனற்குமாரர், சனந்தராகிய பிரம்மபுத்திரர் சகல ஞானத்தையும் தமக்கு வயது பதினறு நிறைந்த காலத்திற் கண்டனர். இவ்வாறு ஞானத்தைப் பிறவியால் தம்பால் பிரகிருதியினுதவியாற் பெறுவோர் பிரகிருதிகா பாவத்தினர்.

இனிச் சாமான்னியர் ஞானத்தை ஆசிரியனது வாக்கு விசேடத்தாற் பெறுவர். இவரை வைகிருதிகாபாவத்தினர் எனக் கொள்க.

இம் மூன்று வழிகளுள்ளும் ஓர் வழியானும் மெய்ஞானத்தைப் பெறுதற்கு இயலாத அபாத்திரர் மிருகத்தன்மை நீங்காதார். இவர்க்கு இப்பிறவியில் ஞானம் கை கூடுதல கடினம்.

ஆகவே, சாமுசித்தர் தாமே முக்திக் கரை சேருவர்.

பிரகிருதாபாவத்தினர் உபதேச மின்றிக் காலக் கிரமத்தில் ஞானம் விளைய முத்தி சேர்வர்.

வைகிருதிகாபாவத்தினர் உபதேச வாயிலாக மெய்ஞ்ஞான பாவந் தோன்றி முத்திக் கரை சேர்வர்.

பாமரர் பிறவிக்கடலுள் உழலுபவர்.

ஆன்மாக்கள் விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலரெனவும் பிரிக்கப்படுவர்.

பாவங்களை 23-வது காரிகையிற் கூறப்பட்டன. அவை அறம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என ஒளி வழிப்பட்ட நான்கும், மறம், அஞ்ஞானம், அவா, அனைசுவரியம் என இருள் வழிப்பட்ட நான்குமாகிய எட்டுமாம். இவற்றின் பலனைக் கூறலுற்றார்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## காங்கிரஸ் காரியக்கமிட்டி தீர்மானம்

காங்கிரஸ் மகாசபையின் காரியக் கமிட்டியானது பம்பாயில் பண்டித ஜவஹர்லால் தலைமையில் கூடி அவசரமான வேலைகளைப் பற்றி யோசித்து காங்கிரஸ் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றி முடிவு செய்திருக்கின்றது. வரப்போகும் தேர்தலில் காங்கிரஸ் சார்பாக வெளியிடப்பட வேண்டிய தேர்தல் அறிக்கையைப் பூர்த்தி செய்திருக்கிறது. சமதர்ம உணர்ச்சி உடையவர்களும் சேர்ந்தே அதைத் தயாரித்திருப்பதால் அது மிகச் சிறந்ததாகவும் எல்லாப் பிரச்னைகளையும் தழுவியதாகவும் இருக்குமென்பதில் சந்தேகமில்லை. மேலும் காங்கிரஸ் தேசீய கட்சியையும் சேர்த்துக் கொள்ளும் முறையில் வகுப்புத் தீர்ப்பைப் பற்றிய வாசகமும் சிறிது மாறறி யிருப்பதாகத் தெரிகிறது. தேர்தலில் எல்லா ஸ்தானங்களுக்கும் போட்டி போட வேண்டுமென்றும், அந்தந்த மாகாணமும் தேர்தல் நிதியைத் திரட்டிக் கொள்ள வேண்டுமென்றும் தெரிவித்திருக்கிறது. இவைகளெல்லாம் பாராட்டத்தக்க வேலைகளே என்பதில் ஆட்சேபமில்லை. காங்கிரஸ்காரர்களிடையே அதிகமாகப் பேசப்பட்டும் சிந்திக்கப்பட்டும் வரும் விஷயமான உத்தியோகப் பிரச்னையைப் பற்றிக் கார்யக் கமிட்டி இன்னமும் முடிவு செய்யாமல் மாகாண சட்டசபைத் தேர்தல்கள் முடிவான பிறகு ஆலோசித்துக் கொள்ளலா மென்று தீர்மானித்து விட்டது சரியல்ல. உத்தியோகத்தை ஏற்பதா இல்லையா என்பதை இப்போதே கூறிவிட்டிருக்கலாம். ஆயினும் கார்யக்கமிட்டி கூறுமற் போனதாலேயே ஏதோ மூழ்கி விட்டதாகச் சிலர் கருதுவதும் ஒப்புக் கொள்ளத் தக்கதல்ல. ஏனெனின் காங்கிரசின் கொள்கையே தேசீயப் போராட்டம். அது பதவிகளை ஏற்றோ ஏற்காமலோ தனது தேர்தல் அறிக்கையின் படி நடந்து கொள்ள முயற்சிக்கும் என்பதில் சிறிதும் சந்தேக மில்லை. காங்கிரசினிடம் நம்பிக்கை இருப்பவர்கள் அதைப் பற்றிக் கவலைப்படாமல் அதன் வெற்றிக்குப் பாடுபட வேண்டும் என்பதே நமது கருத்து. தலைவர்கள் அப்போதைக்கப்போது தக்க யோசனைகளைச் சொல்லி வருவார்கள். ஆதலின் காங்கிரஸ் வாதிகள் அனைவரும் அபிப்பிராய பேதங்களைக் கிளப்பாமல் ஒற்றுமையாக இருந்து தேர்தலில் காங்கிரஸ் பெரும்பான்மையான ஸ்தானங்களைக் கைப்பற்ற முயற்சிக்க வேண்டியது அவசியமாகும். பதவி ஏற்பதா இல்லையா என்பது தேசீயப் போரில் முக்கிய பிரச்னையல்ல. அவ் விஷயத்தில் அவசியமான முறை தலைவர்களால் தக்க சமயத்தில் பின் பற்றப்படும்.

---

## ஊக்கமளிக்கும் விக்ஞாபனம்

நமது தேசத்தை சுதந்தரத்தின் பக்கம் இழுத்துச் செல்லும் சக்தியையுடைய ஒரே ஸ்தாபனமாகிய காங்கிரஸ் மகாசபையின் தேர்தல் விக்ஞாபனம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியினால் ஒப்புக்கொள்ளப்பட்ட பின் வெளியாகி இருக்கிறது. அது தேச மக்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கத்தக்க ராஜீய தஸ்தாவேஜாகவே இருக்கிறது. சமதர்ம வாதியான பண்டித ஜவஹர்லால் முதல், பதவி ஏற்பதைத் தீவிரமாக ஆதரிப்பவர்கள் உள்படக் காங்கிரசிலுள்ள எல்லாப் பிரிவினர்களுடைய சம்மதத்தையும்

பெற்றதாக அது இருப்பது மிக்க விசேஷமாகும். அந்த விக்ஞாபனத்தின் சாராம்சத்தை மற்றோரிடத்தில் பிரசுரித் திருக்கிறோம். அதை அனைவரும் கவனத்துடன் படிக்கவேண்டு மென்பது நமது ஆவல். வங்காளத் தலைவரான ஸ்ரீ. சரத் சந்திரபோஸ் கூறியபடி அதிதீவிரவாதியான பண்டித ஜவஹர் லாலின் தலைமையில் தயாரிக்கப்பட்டதால் தேசத்தை இப்போது சூழ்ந்து கொண்டிருக்கும் எல்லா முக்ய பிரச்னைகளிலும் அந்த அறிக்கை தன் கவனத்தைச் செலுத்தி யிருக்கிறது. விக்ஞாபனத்தில் ஆரம்பத்தில் காங்கிரஸ் மகாசபை பொதுவாக ஐம்பதுவருஷ காலமாகவும், சிறப்பாகப் பதினறு வருஷங்களிலும், செய்துள்ள மகத்தான சேவை குறிப்பிடப் பட்டிருப்பதுடன் சுயராஜ்ய மடைவதற்கு இந்தியாவுக்குள்ள உரிமையும் வற்புறுத்தப் பட்டிருக்கிறது. இடைப் பகுதியில் காங்கிரஸ் சட்டசபைகளுக்குச் செல்வதன் நோக்கமும் இதர விஷயங்களும் விவரிக்கப் பட்டிருக்கின்றன. இறுதியில் காங்கிரஸ் ஆதிக்கம் வந்தால் என்னென்ன நன்மைகள் செய்ய உத்தேசமென்பதும் விவரிக்கப்பட்டு தேசமகா ஜனங்கள் காங்கிரஸையே ஆதரிக்க வேண்டிய அவசியமும் விளக்கப் பட்டிருக்கிறது. இந்தியா விரும்பி ஏற்காத புதிய அரசியலைத் தகர்க்கவும், ஏகாதிபத்ய ஆசைமுறைக்குத் துணைபோகும் பிற்போக்காளர்களைத் தடுக்கவுமே காங்கிரஸ் சட்டசபைக்குச் செல்ல விரும்புகிறது என்பதை அந்த விக்ஞாபனம் நன்கு அறிவிக்கின்றது. இதுமட்டுமேயன்றித் தொழிலாளர் விவசாயிகள், மாதர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், ராஜீயக்கைதிகள் முதலிய பலதிறப்பட்ட மக்களின் மேன்மைக்கும் உயர்வுக்கும் பாடுபடுவதாகவும் தொழிலபிவிருத்தியின் மூலம் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முயற்சிப்பதாகவும் அந்த விக்ஞாபனத்தில் கூறப்பட்டிருக்கிறது. இது ஒரு சந்தேகமற்ற, குழப்ப மில்லாத அறிக்கையே என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. எதிரிகள் வேண்டுமென்றே ஏதேனும் கூறித் திரியலாம் ஆயினும் நாட்டிலுள்ள பற்பல நலத்தாரும் தங்கள் தங்களுடைய முன்னேற்றத்துக் குரிய தஸ்தாவேஜாக இந்த விக்ஞாபனத்தை ஏற்றுக் கொள்ளலாம். வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாகவும் எல்லாரும் திருப்தி யடையும்படியான வகையில் விளக்கப்பட்டிருக்கிறது. தேசமகாஜனங்க ளனைவரும் வரப்போகும் தேர்தலில் காங்கிரஸையே ஆதரிக்க வேண்டியது அவசிய மென்பதை இந்த விக்ஞாபனத்தை வாசிப்பதன் மூலம் அறிந்து கொள்வார்களென்று நம்புகிறோம்.

---

## கல்வி முறையும் வேலையில்லாமையும்

நாட்டில் இப்போது படித்தவரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருக்கிறது. இவ்வேலையில்லாமைக்கும் தற்காலக் கல்விமுறைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாக இதுவிஷயமாக ஆராய்ச்சி செய்த அனைவரும் கூறுகிறார்கள். இப்போதைய கல்விமுறை தற்காலத் தேவைக்கு ஏற்றதாக இல்லை என்பதே பலருடைய அபிப்பிராயம். நம்நாட்டின் நிலைமைக்கேற்ப ஆரம்பக்கல்வி முறையையும் இதர உயர்தரக் கல்வி முறையையும் திருத்தி யமைக்கவேண்டும். தேசத்துக்கேற்றபடி அமைக்கப்படும் கல்விக்குத் தான் தேசியக்கல்வி என்று பெயர். ஆனால் நமது சென்னை சர்க்கார் கல்வி மந்திரி கனம் எஸ். குமாரசாமி ரெட்டியார் ஆந்திர சர்வகலாசாலை பட்டதாரிகளிடையே பேசியபோது இப்போதைய கல்வி முறையில் பலரும் கூறிவரும்

குறைகளுக்குச் சமாதானம் சொல்ல முயன்றிருப்பதுடன் தேசீயக்கல்வி என்னும் அர்த்தமற்ற கூற்றுக்காகத் தற்போதைய கல்வி முறையை முற்றிலும் ஒழித்துவிட முடியுமா எனக் கேட்கிறார். நம் தேச நிலைமைக்கேற்றபடி திருத்தி யமைக்கப்படும் முறையே தேசீயமானது. சிற்சில திருத்தங்களும் மாறுதல்களும் தேவை என்பதை அவரே ஒப்புக்கொள்கிறார். இப்போதைய கஷ்டங்களுக்குக் கல்விமுறை காரணமென்பதைத் தாம் ஒப்புக்கொள்ள முடியாதெனக் கூறுகிறார். ஆனால் தற்காலக்கல்வி முறை சீர்கேடானது என்பதே பல ஆராய்ச்சியாளர்களின் அபிப்பிராயம். தாய்பாஷையின் மூலம் கல்வி போதிக்க வேண்டுமென்னும் அவசியத்தை அவர் ஒப்புக்கொண்டது பற்றிச் சந்தோஷப்படுகிறோம். ஆங்கில பாஷையாலும் அதன் சம்பந்தத்தாலும் நமக்குப் பல நன்மைகள் ஏற்பட்டதாக அவர் கூறுகிறார். அது உண்மையே என்பதில் ஆக்ஷேபமில்லை. அதற்காகத் தேசீயத்தையும், தேசீய முறைகளையும் அலக்ஷியப்படுத்திவிட முடியுமா? மேலும் கனம் கல்விமந்திரி சர்வகலாசாலைகளின் கடமையைப்பற்றிக் கூறுகையில் ஜாதிமத பேதங்களை ஒழிக்கவேண்டும் என்று தெரிவித்துள்ளார், ஆனால் ஜஸ்டிஸ் கட்சியின் ஆதிக்கத்திலுள்ள தற்கால மாகாண அரசாங்கம் வகுப்புவாதத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கிறது. கனம் மந்திரி அபிமானம் காட்டும் ஜஸ்டிஸ்கட்சி நாட்டில் வகுப்புவாதத்தை வற்புறுத்தி வருகிறது. இவ்வாறெல்லாம் செய்துகொண்டே வகுப்பு பேதங்கள் மறையும்படி செய்யவேண்டுமென்பது அர்த்தமற்ற பேச்சாகவே முடியும் என்றுதான் அஞ்சவேண்டியிருக்கிறது.

---

## உலக சமாதான மார்க்கம்

உலகில் அமைதியும் சமாதானமும் நிலவ வேண்டுமென்னும் பேச்சு அதிகமாக இருக்கிறது. ஆயினும் எந்த நிமிஷத்தில் மற்றொரு மகா யுத்தம் ஏற்பட்டு விடுமோ என்னும் அச்சமும் எல்லாருடைய உள்ளத்தையும் வாட்டுகிறது. ஆகவே யுத்தங்களைத் தடுக்கவும் உலகத்தில் நிரந்தரமான சமாதானம் நிலவும்படி செய்யவும் பற்பல சங்கங்களின் ஆதரவில் உலக சமாதான காங்கிரஸ் ஒன்று இம்மாதம் 3-ந் தேதி முதல் 6-ந் தேதி வரையில் பெல்ஜியம் தேசத்திலுள்ள பிரஸல்ஸில் கூடியது. இந்தியாவும் அதில் பங்கு எடுத்துக் கொண்டது குறிப்பிடத்தக்கதாகும். சமாதான காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டியில் நமது ஸ்ரீமதி. சரோஜனி தேவியும் ஒருவர். அகில இந்திய காங்கிரஸ் மகா சபையின் பிரதிநிதியாக இங்கிலாந்திலிருந்து கொண்டு இந்தியா சார்பாகப் பிரசாரம் செய்துவரும் ஸ்ரீ. வி. கே. கிருஷ்ணமேனன் சென்றனர். காங்கிரஸ் மகாசபையின் தலைவரான பண்டித ஜவஹர்லாலும், பாரத மாதாவின் உத்தமப் புதல்வரான மகாத்மாஜியும், மற்றும் பலரும் வாழ்த்துச் செய்திகளை அனுப்பி யிருக்கிறார்கள். உலக சமாதானத்துக்காக வென்று பெரிய மகாநாடுகூடித் தக்க ஏற்பாடுகளைச் செய்யாமல் கலைவதில் பிரயோஜனமில்லை. யுத்தத்துக்கான காரணங்களைக் கண்டுபிடித்து நீக்கினாலொழிய சமாதான மென்பது ஏற்படாது. பண்டித ஜவஹர்லால் கூறுவதுபோல இந்தியர்களாகிய நாம் நமது அரசியல் விடுதலைக்காகவும் சுயேச்சைக்காகவும் பாடுபட்டுக் கொண்டிருக்கும் நிலைமையிலும் பல தேசங்களுக் கிடையே சமத்துவம், ஒத்துழைப்பு ஆகியவை ஏற்படுவதிலும், உலக சமாதானத்திலும், யுத்த

மொழிப்பிலும் ஆர்வ முடையவர்களாக இருப்பதால்தான் இந்த உலக சமாதான காங்கிரசை ஆதரிக்கவேண்டி யிருக்கிறது. உண்மையில் சமாதானத்துக்கு மார்க்கமென்ன? ஜவஹர்லால் தமது செய்தியில் தெரிவித்திருக்கிறபடி ஏகாதிபத்ய ஆசை முறையை, ஆதிக்கத்தை ஒழிப்பதுதான். ஏனெனின் ஏகாதிபத்ய ஆதிக்கம் என்றாலே சமாதான அழிவு என்றுதான் அர்த்தம். இதனால் லக்ஷ்மணபுரியில் கூடிய நமது காங்கிரசும் ஒரு தேசம் இன்னொரு தேசத்தைச் சுரண்டுவதை நிறுத்தினால்தான் சமாதானத்தை நிலை நிறுத்த முடியுமென்று தீர்மானித்திருக்கிறது. இதையே நாமும் இப்போது பிரஸ்ஸல்ஸ் சமாதான காங்கிரசுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறோம். ஏகாதிபத்ய ஆசையை மனதில் வைத்துக்கொண்டு எவ்வளவு மகாநாடுகள் கூடிய போதிலும் பயன்படாது. ஜவஹர் எடுத்துக் காட்டும் இவ் வுண்மையை ஐரோப்பிய வல்லரசுகள் கவனிப்பார்களா?

---

## சுயராஜ்யம் வந்தபிறகு தானா?

பம்பாய் கார்ப்பொரேஷனில் இப்போது கராச்சி காங்கிரஸ் திட்டத்தை ஆதரிக்கும் சமதர்மிகள் சிலர் ஸ்தானம் வகிப்பதால் அவர்கள் சிறிது சிறிதாகத் தங்கள் கொள்கையைக் கார்ப்பொரேஷனில் புகுத்த முயற்சிப்பது பாராட்டத் தக்கதாகும். ஆனால் இத்தகையோர் சிறு பான்மையோராக இருக்கின்றனர். சமீபத்தில் கூடிய கூட்டமொன்றில் ஸ்ரீ. எம். ஆர். மஸானி, பம்பாயின் வாழ்க்கையை உத்தேசித்து முனிசிபல் சிப்பந்திகள் எவருக்குமே 30 ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் கூடாதென்று ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். இது நிறைவேறிவிட்டது சந்தோஷத்தையே அளிக்கிறது. ஆனால் இதனால் செலவு அதிகரிக்கு மாதலாலும், மற்றும் முனிசிபல் செலவைக் குறைப்பதற்காகவும் ஜனாப் மெஹர் அலி, தேசத்தின் வறுமை நிலையை உத்தேசித்து காரப்பொரேஷன் சிப்பந்திகள் எவருக்குமே 500 ரூபாய்க்கு மேல் சம்பளம் கூடாதென்னும் தீர்மானம் கொண்டு வந்தார். முன் தீர்மானத்தை நிறைவேற்றியவர்கள் இதையும் நிறைவேற்றி யிருந்தால் நலமாக இருந்திருக்கும். வேண்டுமாயின் 500 என்பதை 600 அல்லது 700 ஆகவும் திருத்தி யிருக்கலாம். ஆயினும் சுயராஜ்யம் வரும்வரை இப்பிரேரணையை ஒத்தி வைக்க வேண்டுமென்று மற்றொருவர் கொண்டுவந்த திருத்தம் நிறைவேறி விட்டது. இதிலிருந்து புலனாவதென்ன? சுயராஜ்யம் வந்த பிறகுதான் இத்தகைய சௌகரியங்கள் ஏற்படுமென்பதும், அதை நடத்தி வைப்பவர்கள்தான் இப்படிப்பட்ட சிறந்த வேலைக்குத் தகுதியானவர்களென்பதும் ஏற்படுகிறதல்லவா! கராச்சி திட்டத்தை அடிப்படையாகக் கொண்டே சென்னை சட்டசபையிலும் பாமர மக்களுக்கு நலந்தரக்கூடிய மசோதாக்களுக்கு ஸ்ரீ. சி. ஆர். ரெட்டி ஆதரவளித்தார். ஆதலால் காங்கிரஸ் ஆதிக்கம் வந்தால் அதாவது சுயராஜ்யம் வந்தால்தான் தேச நன்மைக்கான இத்தகைய யோசனைகள் அமலுக்கு வரமுடியும் எஃபது நன்கு தெரிகிறதல்லவா? பம்பாய் கார்ப்பொரேஷனில் காங்கிரஸ் மெம்பர்கள் இன்னும் அதிகமாக இருந்திருந்தால் ஸ்ரீ. மெஹர் அலியின் பிரேரணையும் நிறைவேறி யிருக்குமென்பதில் சந்தேகமில்லை ஆதலினால்தான் எல்லா பொது ஸ்தாபனங்களிலும் காங்கிரஸ்காரர்கள் பெரும் பான்மையோராக இருக்கவேண்டும் என்று சில காங்கிரஸ் வாதிகள் கூறுகின்றனர்.



# லக்ஷ்மிபாய்

அல்லது

# ஆற்காட்டு முற்றுகை.

(எம். லக்ஷ்மண முதலியார்.)

(159-ம் பக்கத் தொடர்ச்சி.)

"இந்த மிரட்டல் என்னிடம் பலிக்காது. நான் சொல்வதைக் கேள். ஆற்காட்டு முற்றுகையின் பொழுது உன்னைச் சிறைவைத்திருந்த ராஜா சாஹேபு உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஒரே உறுதியாய் இருந்து வருகிறாராம். இப்பொழுதுகூட இங்கே அவருடைய ஆள் ஒருவர் வந்திருக்கின்றார். உன்னை எப்படியாவது சரிப்படுத்தித் தருவதாகச் சொல்லிவிட்டேன். ஹுசேனுக்குச் சீக்கிரம் மரண தண்டனை விதிக்கப் போகிறார்கள். அதன் பின் உன்கதி என்ன? இந்த ஓலைகளை ராஜாவிடம் காண்பித்தேனே உடனே உனக்கு என்ன சிட்சை கிடைக்கும் தெரியுமா? சுண்ணாம்பு காலவாயில்தான் வைத்துக் கொளுத்துவார். நன்றாய் ஆலோசனை செய்து சொல்" என்று கூறி முடித்தான். உடனே 'மத்து' என்ற சத்தமும் அதன் பின்னே 'தடால்' என்ற மற்றொரு சத்தமும் கேட்டு இலக்ஷ்மிபாய் திடுக்கிட்டாள். ஒரு பெரிய இரும்புத் தடியால் மண்டையில் அடிக்கப்பட்டு மாபத்கான் கீழே சாய்ந்தான் என்பதைக்கூட அவள் அறியவில்லை. தன்னை நோக்கி ஓர் உருவம் மெதுவாய் நகர்ந்து வருவதாக அவள் அறிந்தாள். பயம் அதிகரித்தது. ஆனால் வெளியே ஓடிவிடுதற்குப் போதிய தைரியமில்லை.

"அம்மா, அஞ்சாதே. நான்தான் குரூரன் இங்கிருக்கிறேன்" என்ற குரல் தனக்குச் சமீபமாய்க் கேட்டதும் அவளது உறைந்த இரத்தம் மறுபடி கரைந்து ஓட ஆரம்பித்தது. ஆனால் குரூரன் அங்கிருக்கின்றான் என்று தெரிந்ததும் அவளுடைய பயம் நீங்கியபோதிலும் சந்தேகம் அதிகரித்தது. அப்போது ஒரு கனத்த வஸ்துவைக் கீழே போட்டு இழுத்துக் கொண்டு போகும் சப்தம் கேட்டு, "அது யார்? சேவகா" என்றான். சிறிது நேரம் பேச்சில்லை. பிறகு குரூபி திரும்பி அவளருகில் வந்தான். "அம்மா, நான்தான் குரூபி. இனி நாம் வெகு ஜல்தியில் ஒரு காரியத்தை செய்து முடிக்க வேண்டும்" என்றான்.

"என்ன? நீ சொல்வது எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. மாபத்கான் எங்கே?"

"மாபத்கான்! இது என்னவென்று பார்—பாருங்கள்."

இருட்டில் குரூபியிடமிருந்த ஒரு கனத்த இரும்புத் தடியை வாங்கித் தடவிப் பார்த்தாள் இலக்ஷ்மிபாய். 'மந்து' என்று கேட்ட சப்தமும் பிறகு 'தடால்' என்று கேட்ட சப்தமும் இப்பொழுது அவளுக்கு விளங்கின.

"அம்மா. அந்த வஞ்சகனை இதனால் ஒரு அடி கொடுத்தேன். அவனைக் கொன்றுவிடவில்லை. ஆனால் அவன் மூர்ச்சையாகிவிட்டான். ஒருவர் கண்ணுக்கும் அகப்படாத ஒரு சந்தில் இழுத்துக்கொண்டு போய்ப் போட்டுவிட்டு வந்தேன்.

இதைக் கேட்டதும் அவள் மனதில் கொஞ்சம் ஆறுதல் உண்டாகியது.

"சேவகா, உண்மையுள்ள சேவகா! இந்த உதவிக்கு நான் என்ன நன்றி செய்யப்போகிறேன்? நீ ஆரம்பத்திலிருந்தே இங்கிருக்கின்றாயா?" என்றாள்.

"ஆம். அந்தப்புரத்திலிருந்தே உங்கள் பின்னால் வந்தேன்."

"ஏன் நீ அந்தப் புரத்திற்கு வந்தாய்?"

"இன்று ஒரு முக்கியமான காரியம் நடத்தப்போகிறேன். அதில் உங்களையும் சம்பந்தப்படுத்த வேண்டியதாய் இருக்கின்றது. அதன் நிமித்தம் உங்களை எழுப்புவதற்காக அந்தபுரம் வந்தேன். ஆனால் இந்த இருட்டு வேளையில் நீங்கள் புறப்பட்டு வெளியே வந்தீர்கள். நானும் மர்மமாகவே பின் தொடர்ந்தேன்."

"கடவுள் செயல்."

"இதோ வாங்கிக்கொள்ளுங்கள் ஹுசேன்கானுக்கு நீங்கள் எழுதிய ஓலை நறுக்குகள் இதை மாபத்கானிடமிருந்து நான் எடுத்துவிட்டேன்" என்று சொல்லி அதை அவளிடம் கொடுத்துவிட்டான். இதைப் பெற்றுக் கொண்ட பிறகுதான் அவளது முழு உயிரும் அவளுக்குத் திரும்பிவந்தது போலிருந்தது.

"இனித் தாங்கள் நான் சொல்வதுபோல் கேட்டுக்கொண்டு என் பின்னோடே வரவேண்டியது. நாம் செய்யவேண்டிய பெரிய காரியத்திற்கு நேரமாகிவிட்டது. அதில தாமதம் செய்தால் நமக்கு ஆபத்துவந்து நேரும்" என்று சொல்லிக்கொண்டு ஓர் வழியில் நுழைந்து நடந்தான்.

இப்போது குரூரனிடத்தில் இலக்ஷ்மிபாயிக்கு அபார நம்பிக்கையும் மட்டிலடங்காத விசுவாசமும் திடீரென்று உண்டாகியது.

"நண்பரே! இனி உங்களை என்னோடு பிறந்த சகோதரராகவே நினைப்பேன்."

குரூபி பதில் பேசவில்லை. அவன் எதையோ நினைத்துப் பெருமூச்சு விட்டான்.

"இந்த அரண்மனைக்கு சேவகத்துக்கு நீங்கள் வந்து கொஞ்ச காலம் தானே ஆகிறது?" என்று மறுபடியும் கேட்டாள்.

"ஆம், அம்மா."

"இந்த சந்து பொந்துகளில் பலநாள் பழகியவனைப்போல் இருட்டில் வெகு சுலபமாய் நடமாடுகிறீர்களே!"

"ஓஹோ! நான் வந்து கொஞ்ச காலந்தான் ஆனாலும் இரவு முழுவதும் தூங்காமல் இந்த அரண்மனை முழுவதும் சுற்றிககொண்டுதானிருப்பேன். இருட்டில் பழகிப் பழகி என் கண்கள்கூட பூனைக்கண்கள் போலாகிவிட்டன. வெளிச்சமில்லாமலே எப்பேர்ப்பட்ட இருட்டிலும் எனக்குக் கண் நன்றாய்த் தெரியும்.

"ஆ! அப்படியானால் நான் உங்களை ஒரு விஷயம் கேட்கிறேன். ஒளிக்காமற் சொல்கிறீர்களா?"

"தெரிந்திருந்தால் சொல்கிறேன்."

"இந்த அரண்மனையிலுள்ள கள்ளவழிகளிலும் சுரங்கவழிகளிலும் ஒரு உருவம் இரவில் நடமாடிக் கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். அது யார்?"

"நான் ஒருவன்"

"இன்னும் யார்?"

"மாபத்தானை இரண்டொரு தடவை கண்டிருக்கிறேன். அவன் உங்களையும் ஹுசேனையும் உளவு பார்த்துவந்தான் என்று என் மனதில்பட்டது. ஆகையால் ஒருவரும் அறியாமல் நான் அங்கே மறைந்திருந்து யாராவது வருகிறார்களா போகிறார்களா வென்று கவனித்து வந்தேன்?"

"நீங்கள் ஏன் அப்படி கவனிக்கவேண்டும்?"

"மாபத்கான் உங்களுக்காவது ஹுசேனுக்காவது ஏதாவது இடையூறு செய்வான் என்று நான் நினைத்தேன். உங்களிருவருக்கும் ஒரு குறைவும் ஏற்படாமல் பாதுகாக்கவேண்டியது என் கடமை. ஆனால் அந்த பாதகன் என்னை ஏமாற்றிவிட்டான். என்னுடைய மற்றொரு காலும் மற்றொரு கையும் மட்டும் இருந்தால்!......" என்று பெருமூச்சு விட்டான் குமரான்.

இதைக்கேட்டதே அவன் பாலிருந்த இலக்ஷிமிபாயின் அன்பு கரை புரண்டு ஆனந்தக்கண்ணீராக வழிந்தது.

"அண்ணா! என் உயிரைக்காப்பாற்றிய அண்ணா! உங்களுடைய தியாக சக்தியும் பெருந்தன்மையும் யார் அறிவார்கள்? இதை முன்னமேயே அறியாத பாபியாய் இருந்தேனே! நீங்கள் உண்மையில் ஒரு சேவகன் அன்று! நீங்கள் ஒரு மகா வீரனாய் இருக்கவேண்டும்!—ஆ! உங்களைப் போலவே சற்குணம் வாய்ந்த என் சகோதரர்! என் உயிருக்குயிரான சகோதரர்! என் அருமை அண்ணா உத்தமஜீ! ஆற்காட்டில் என் உயிரைக்காப்பாற்றும் பொருட்டு உயிர் துறந்தார். ஐயோ! அண்ணா! நீ உயிர் நீத்த பிறகும் நான் ஆவியை வைத்துக் கொண்டிருக்கிறேனே!" என்று பாதி புலம்பலும் பாதி ஏக்கமுமாகப் பெருமூச்சு விட்டாள்.

"அம்மா, வருத்தப்படாதே எனக்கும் உன் தமயனைத்தெரியும்."

"அவர் இப்போது உயிரோடு இருந்தால் எனக்கு நீங்கள் ஒன்று அவர் ஒன்று ஆக இரண்டு தமையன்கள் இருப்பார்களே."

"அவர் இருந்தால் இப்போது இந்த ஹுசேன்கானை ஒரு விநாடியில் கோட்டைக்குள்ளிருந்து அப்பால் கொண்டுபோய் விடுவாரே."

"ஆம் அதில் என்ன ஆக்ஷேபனை? ஆனால் நீங்கள் அவருக்குமேல் செய் வீர்கள். கடவுள் உங்களுக்குப் பெரும்பிழை செய்துவிட்டாரோ. நீங்கள் எந்த யுத்தத்தில் அங்கஹீனம் அடைந்தீர்கள்?" என்று கேட்டாள் இலக்ஷ்மிபாய்.

"அம்மா, பேசாதே. இங்கே காவல்காரர்கள் மறைந்திருப்பார்கள்." என்று எச்சரிக்கை செய்தான் குரூபி. இவ்விதமாக சிறிது நேரம் உஷாராய் நடந்து சென்றபிறகு அவ்விருவரும் ஒருபடிக் கட்டை அடைந்தார்கள். அங்கே வானத்திலிருந்து நக்ஷத்திர வெளிச்சம் ஒரு சந்து வழியாக வந்தபடியால் லக்ஷ்மிபாய்க்குக் கொஞ்சம் கண்தெரிந்தது. அதில் குரூபனைக்கவனித்தாள். யாராவது தேவதூதன் இந்த விதமான உருவத்தில் தன்னைக்காப்பாற்றுவதற் காக வந்திருக்கின்றானோவென ஐயுற்றாள். இந்த அற்புதமான மனிதன் யாராவது இராஜகுமாரனாய் இருந்து யுத்தத்தில் தன் அவயவங்களை இழந் திருக்க வேண்டுமென்று அவன் யூகித்தாள். ஆ! கடவுளின் தண்டனை பொல் லாது! தூயகுண முடையவரை ஏன் ஈசன் இப்படி வருத்துகிறான்? என்று துக்கித்தாள். உடனே "ஊழ்வினை யாரைவிட்டது?" என்ற பழமொழி ஞாபகத்திற்குவரவே தனது மனதைத் தானே தேற்றிக்கொண்டு குரூபன் பின் னால் படிக்கட்டுகளைக் கடந்துபோய்க் கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் அவர்கள் அரண்மனையின் மேல் தளத்தை வந்தடைந்தார்கள். உப்பரிகை களும், கூடகோபுரங்களும், மாடமாளிகைகளும் வானத்தை முட்டிக் கொண்டு நிற்கும் இருண்ட இராக்ஷஸர்களைப்போல் தோன்றின.

"இப்போது நாம் சர்தார் ஹுஸேனை விடுதலை செய்யப்போகின்றோம்" என்று திடீரெனச் சொன்னான் குரூபி.

இந்த வார்த்தைகள் இலக்ஷ்மிபாயின் காதில் பட்டதும் அவள் தலை சுழன்று நெஞ்சம் துடித்தது. மார்பு விம்மியது அவளது மனக்கண் முன்பு ஒரு ஜோதி தோன்றியது. அதினின்றும் மிகப்பிரகாசமான ஓர் உருவம் உதித்தது. அதன் சுந்தரவதனம் அவளை நோக்கி புன்னகை புரிந்தது. அது அரும்புபோல் மீசைதரித்த ஹுஸேனின் அழகிய முகம் என்று கண்டாள். ஆனந்தப் பரவசப்பட்டாள், அவனை ஆவலுடன் ஆலிங்கனம் செய்துகொள்ள அவளது மெல்லிய கரங்கள் பரிதவித்தன. ஆ! இது உண்மையாயிருக்குமா வென நினைத்தாள். எங்கும் முன்போல் ஒரே இருளாயிருந்தது. முன்போல் கோபுரங்கள் வானத்தை யளாவிக்கொண்டு நின்றன. அலங்கங்களிலிருந்து வீசிக்கொண்டு வரும் காற்றின் சப்தம் இராக்ஷஸர்கள் மூச்சு விடுவதுபோல் தோன்றியது. அப்பொழுது தனது கால் ஓரத்தில் ஏதோபொத்தென்று விழு ந்தசப்தம் கேட்டு இலக்ஷ்மிபாய்தனது முழுசுவாதீனத்திற்கும் வந்தாள். அவள் பால் ஓரத்தில் கிடந்த சுமை பெரிய வடக்கயிற்றின் சுருள் என்றும் அதன் பக்கத்தில் குரூபி கையில் பெரிய வில் ஒன்றை வைத்துக்கொண்டு நிற்பதையும் கண்டாள், அந்த அற்புத புருஷன் என்ன செய்யப்போகிறான் என்று ஆவ லுடன் எதிர் பார்த்துக்கொண்டு சித்திரப் பதுமைபோல் நின்றாள்.

குரூபி தன் கையில் பிடித்திருந்த வில்லை மார்பில் சாற்றிக்கொண்டு தனக்குள்ள ஒற்றைக்கையினால் ஒரு அம்பை எடுத்தான். அதை இலக்ஷ்மிபாயி டம் காண்பித்தான். அவளும் அதைத் தொட்டுப்பார்த்தாள். அவளது ஆச்சரி யம் பன்மடங்கு அதிகமாயிற்று. ஏனெனில் அந்த அம்பின் அடிப்பக்கத்தில் ஓர் நீண்டகயிற்றின் நுனி கட்டப்பட்டிருந்தது.

"அதோ தெரிகிறது பார் வெளிச்சம்" என்று சொல்லிக்கொண்டு தனது கையில் பிடித்திருக்கும் அம்பினால் ஆகாயத்தைச் சுட்டிக் காண்பித்தான். வெருண்ட மானைப்போல் விழித்துக்கொண்டு நிற்கும் அம்மங்கை அண்ணாந்து பார்த்தாள். வானளாவி நிற்கும் கோபுரத்தின் உச்சியில் கனத்த சுவற்றிலுள்ள ஒரு சாளரத்தின் வழியாய் மங்கலான வெளிச்சம் காணப்பட்டது.

"அங்கேதான் எனதருமைச் சர்தார் மனம் வாடித்தவிக்கின்றார். நாம் அவரை மீட்டுக்கொண்டு போகாவிட்டால் அந்த சாளரத்தின் வழியாய்க் கீழே குதித்து தன் உயிரை மாய்த்துக்கொண்டு விடுவார்." என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது 'விண்' என்று ஒரு ஓசைகேட்டது. மறுவினாடி ஆகாயத்தில் 'டிக்' என்று மற்றொரு சப்தமும் அதன்பிறகு அவர்கள் நின்ற இடத்திற்கு சமீபத்தில் சிறிது தூரத்தில் 'டக், என்ற சப்தமும் கேட்டன.

"அம்பு சாளரத்திற்குள் போகாமல் ஓர் கல்லில் முட்டிக் கீழே விழுந்துவிட்டது" என்றான் குரூபி.

அவன் ஒற்றைக்கையினாலேயே வெகு சுறு சுறுப்பாய் அம்பை வெகு தூரத்திலுள்ள சாளரத்தை குறிவைத்து எப்படி எய்யமுடியும் என்று வியப்புற்றவளாய், "அண்ணா, நீங்கள் வில்வித்தையில் மிகத் தேர்ச்சி பெற்ற மன்னராய் இருக்கவேண்டும்" என்று மெதுவாய்ச் சொன்னாள்.

"அம்மா, அதெல்லாமில்லை. சர்தார் சிறைபட்ட மறுதினம் முதற்கொண்டே இந்த வில்லினாலும் இந்த அம்பினாலும் அந்த சாளரத்திற்குள் எய்வதற்குப் பழகிக்கொண்டு வருகிறேன். இந்த அப்பியாசத்தை தினமும் நடு நிசி வேளையில் யாரும் காணாமல் செய்துகொண்டுதான் வருகிறேன்." என்று சொல்லிக்கொண்டே பட்டுக் கயிற்றைத் தாம்பிக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் அந்தக்கயிற்றின் முனையில் கட்டப்பட்டிருந்த அம்பு அவன் கைக்கு வந்தது.

"இதோ ப்பார். எனது இடது கையில் பாதியில்லை. ஆனபோதிலும் வில்லைத் தரையில் எவ்வளவு கெட்டியாய் அழுத்திக் கொள்கிறது. பார்! இந்த ஒற்றைக் கையைக்கொண்டே அம்பைக் குறிபார்த்து எய்ய வேண்டியதாய் இருக்கின்றது." என்று சொல்லிக்கொண்டே மண்டியிட்டான். மறுபடியும் "விண்" என்று ஓசை உண்டாகியது. ஆகாயத்தில் "டிக்" என்ற மற்றொரு சப்தமும் கேட்டது. ஆனால் "டக்" என்ற மூன்றாவது ஓசை கேட்கவில்லை.

(தொடரும்.)

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாதுஞூ புரட்டாசிமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1936ஞூ செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் (1936ஞூ அக்டோபர்மீ) | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [சிதி புண்ணியகாலம் |
| 1 | 16 | புதன் | பிர47-52 | உத்33-23 | அ33-23ம | ரிஜ பாத்ரபத சுத்தம்,ஷட |
| 2 | 17 | வியா | துதி53-20 | அஸ்40-13 | சித்60 | ஸாமோ உபாகர்மம் |
| 3 | 18 | வெள் | திரி59-32 | சித்47-35 | சித்60 | சோடசோம விரதம் [ர்த்தி |
| 4 | 19 | சனி | சது60 | சுவா55-10 | அ55-10சி | மாசசதுர்த்தி, விநாயகசது |
| 5 | 20 | ஞா | சது6-0 | விசா60 | மர60 | |
| 6 | 21 | திங் | பஞ்12-15 | விசா2-50 | மர2-50சி | |
| 7 | 22 | செவ் | சஷ்17-48 | அனு9-53 | சி9-53மர | |
| 8 | 23 | புதன் | சப்22-18 | கே15-53 | சி15-53ம | |
| 9 | 24 | வியா | அஷ்25-10 | மூல20-20 | சித்60 | |
| 10 | 25 | வெள் | நவ25-58 | பூரா22-52 | பி22-52சி | |
| 11 | 26 | சனி | தச24-38 | உத்23-20 | சித்60 | |
| 12 | 27 | ஞா | ஏகா21-10 | திரு21-35 | அ21-35ம | |
| 13 | 28 | திங் | து15-45 | அவி17-58 | சித்60 | |
| 14 | 29 | செவ் | திர8-45 | சத12-48 | மர60 | |
| 15 | 30 | புதன் | சது0-23 | பூர6-18 | அ6-18சி | பௌர்ணமி,உமா மஹேஸ் |
| | | | ○15-12 | உத்59-13 | | வர விரதம, அபமாகம் |
| 16 | 1 | வியா | பிர41-35 | ரே51-30 | ம51-30அ | மாளயபட்ச ஆரம்பம் |
| 17 | 2 | வெள் | துதி32-13 | அஸ்44-10 | அ32-13சி | அசூன்ய சயன விரதம் |
| 18 | 3 | சனி | திரி23-28 | பர37-35 | சி37-35அ | பிருஹத்யுமா விரதம் |
| 19 | 4 | ஞா | சது15-38 | கி✻35-0 | சித்60 | கிருத்திகை, கடன் தீர்க்க |
| 20 | 5 | திங் | பஞ்9-5 | ரோ27-55 | அமி60 | சர்வ முகூர்த்தம் |
| 21 | 6 | செவ் | சஷ்4-3 | மிரு25-23 | சி25-23மர | சந்திர சஷ்டி விரதம் |
| 22 | 7 | புதன் | சப்0-48 | திரு24-33 | சித்60 | ருத்ராஷ்டமி, மத்யாஷ் |
| | | | அஷ்59-15 | | | டமி,மஹாலக்ஷ்மி விரதம் |
| 23 | 8 | வியா | நவ59-25 | புன25-23 | அமி60 | துர்கை நவமி . [39-20 |
| 24 | 9 | வெள் | தச60 | பூச27-35 | மர60 | ஹரிசங்கரயோகா, 8-க்குள் |
| 25 | 10 | சனி | தச1-13 | ஆயி31-35 | ம31-35அ | ஆபுதம் பழக்க [மழை |
| 26 | 11 | ஞா | ஏகா4-10 | மக36-28 | ம36-28சி | சாவ, மத்வ ஏகாதசி |
| 27 | 12 | திங் | து8-13 | பூர42-10 | சித்60 | பிரதோஷம [விரதம் |
| 28 | 13 | செவ் | திர12-58 | உத்48-33 | அ48-33சி | மாச சிவாராத்திரி, கேதார |
| 29 | 14 | புத | சது18-28 | அஸ்55-38 | மர55-38சி | கரிநாள் [வாதை |
| 30 | 15 | வியா | அ● 24-28 | சித்60 | சித்60 | சர்வ, பிதுரு மாளய அமா |
| 31 | 16 | வெள் | பிர30-45 | சித்3-3 | சித60 | ஆஸ்வீயசுத்தம்,நவராத்திரி |
| | | | | | | ஆரம்பம், சந்திர பூஜை |

| | | | |
|---|---|---|---|
| | | | சே |
| சனி | 7-துலா-சுக் | | |
| | | | செ |
| ராகு | குரு | | கு-பு சுக |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS